உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

சிதம்பரம்-ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# திருவருட்பாவின்

# நிரதிசயாநந்தத் திரட்டு

இது

சென்னை, பெரம்பூர் ரயில்வே ஷாப்பு சாஷியடாகிய

ஸ்ரீமான் மா. சீதாராம் நாயுடு அவர்கள்

வேண்டுகோளின்படி

சாதுக்களால் திரட்டப்பட்டு

வியாசர்பாடி ஆநந்தாஸ்ரமம்

ஸ்ரீ மூர்த்தி சுவாமிகளால்,

சென்னை,

சிவரகசியம் அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1916.

Price As. 8.] [விலை அ

Outer Cover Printed by W...



ஸ்ரீ திருவருட்பிரகாச வள்ளலார்

உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்.

# இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா.

# நிரதிசயாநந்தத் திரட்டு.

---

## சித்திவிநாயகர் துதி.

உள்ளமு முயிருமுணர்ச்சியு முடம்பு முறுபொருள் யாவுநின் றனக்கே
கள்ளமுங் கரிசு நினைந்திடா தகவிககழலிணை நினைந்து நின் கருணை
வெள்ளமுண் டிரவு பகலறி யாதவீட்டினி லிருந்துநின் றேடும்
விள்ளலில் லாமற் கலப்பனோ சிதநி விநாயக விக்கினேச் சுரனே.

நாகமுங கடந்து நிறைந்துநின் மயமே நானென வறிந்து நானென் றுளும்
பேதமுங கடந்த மௌனரா சியத்தைப் பேதையேன் பிடிப்ப தெந்
[நாளோ.
வேதமுஞ் சமய வாதமும் விடுத்தோ ரிதயமு மேழை யேன் சிரமும்
வேதமுந் தாங்கும்பாதனே சித்தி விநாயக விக்கினேச் சுரனே.

சச்சிதா நந்த வடிவகம் வடிவங் சகுமதிட் டானமற் றிரண்டும்
பொய்ச்சிதா பாசக கற்பனை யிவற்றைப் போக்கியங் கவவடி வாகி
யச்சிதாகார போதமு மதன்மே லாநந்த போதமும் விடுத்தல்
மெய்ச்சிதாம் வீடென் றுரைத்தனை சிதநி விநாயக விக்கினேச் சுர
[னே.

ஒன்றல விரண்டு மலவிரண் டொன்றே ருருவல வருவல வுவட்ட
நன்றல நன்றல்லா தலவிந்துநாதமு மலவிவையனைத்தும்

பொன்றலென்றறிந்துட் புறத்தினுமகண்டபூரணமாஞ் சிவமொன்றே
யென்றலென் றறிநீயென்றனை சித்திவிநாயக விக்கினேச்சுரனே.

கானனீர்விழைந்த மானெனவுலகக் கட்டினைநட் டுழன்றலையு
மீனவஞ்சக நெஞ்சகப்புலையேனை யென்றுகொண்டருளு நாளுளதோ
வூனமொன்றில்லா வுத்தமருளத்தே யோங்குசீர்ப் பிரணவவொளியே
வேணவில்கரத்தோர்க் கினியவா சித்திவிநாயக விக்கினேசுரனே.

## திருவடிப் புகழ்ச்சி.

### நூற்றிருபத்தெட் டடியான் மிகுத்துவந்த கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

பரசிவஞ் சின்மயம் பூரணஞ் சிவபோக பாக்கியம் பரமநிதியம்
பரசுகந் தன்மயஞ் சச்சிதாநந்தமெய்ப் பரமவே காந்த நிலயம்
பரமஞா னம்பரம சத்துவ மகத்துவம் பரமகை வல்ய நிமலம்
பரமதத் துவநிரதி சயநிட்களம்பூத பௌதிகாதார நிபுணம்
பவபந்த நிக்ரக விஞ்ஞக சகளஞ்சிற் பரம்பராநந்த சொரூபம்
பரிசயா தீதஞ்சு யஞ்சதோ தயம்வரம் பரமார்த்த முக்தமௌனம்
படனவே தாந்தாந்த மாகமாந் தாந்தநிரு பாதிகம் பரமசாந்தம்
பரநாத தத்துவாந் தஞ்சகச தரிசனம் பகிரங்க மந்தரங்கம்
பரவியோ மம்பரம ஜோதிமயம் விபுலம் பரம்பர மனந்தமசலம்
பரமலோ காதிக்க நித்யசாம பிராசசியம் பரபரம் பரமசூக்ஷமம்
பராபர மநாமய நிராதார மகோசரம் பரமரந் திரம்விசித்திரம்
பராமுத்த நிராகரம் விகாசனம் விகோடணம் பரசுகோ தயமக்ஷயம்
பரிபவ விமோசனம் குணரகிதம் விசுவம்பதிர்த்துவ பரோபரீணம்
பஞ்சகிர்த் தியசுபூத கர்த்தத்து வந்தற்ப ரஞ்சிதம் பரவியாசகம்
பகர்சுபா வம்புனித மதுலமது லிதமம்ப ராம்பர நிராலம்பனம்

பரவுசா க்ஷாத்கார நிரவயவங் கற்பனாதீத நிருவிகாரம்
பரதுரிய வநுபவங் குருதுரிய பரமம் பகம்பகா தீதவிமலம்
பரமகரு ணாம்பரஞ் சற்பதங் கனசொற் பதாதீத மின்பவடிவம்
பரோக்ஷஞா னாதீத மபரோக்ஷ ஞானானு பவவிலாசப் பிரகாசம்
பாவனா தீதங்கு ணாதீத முபசாந்த பதமகா மௌனரூபம்
பரமபோ தம்போத ரகிதசகி தஞ்சம்ப வாதீத மப்பிரமேயம்
பகரனந் தானந்த மமலமுசி தஞ்சிற்ப தஞ்சதா னந்தசாரம
பரையாதி கிரணைக சாங்கமௌ பாங்கவிம் பாகாரநிருவிகற்பம்
பரசுகா ரம்பம்ப ரம்பிரம வித்தம்ப ரானந்த புரணபோகம்
பரிமிதா தீதம்ப ரோதயம் பாகிதம் பரபரீணம் பராந்தம்
பரமார்ப்பு தம்பரம சேதனம் பசுபாச பாவனம் பரமமோக்ஷம்
பரமாணு குணநவா தீதஞ்சி தாகாச பாஸ்கரம் பரமபோகம்
பரிபாக வேதனவ ரோதயா னந்தபத பாலனம் பரமயோகம்
பரமசாத் தியவதீ தானந்த போக்கியம் பரிகதம் பரிவேத்தியம்
பரகேவ லாதவிதா நந்தானு பவசந்த பாதாக்ர சுத்தபலிதம்
பரமசுத் தாத்விதா நந்தவனு பூதிகம் பரிபூத சிற்குணாந்தம்
பரம சித்தாந்தநிக மாந்தசம ரசசுத்தப ரமானு பவவிலாசம். (௭)

தாமிகுஞ் சர்வசா திட்டான சத்தியஞ் சர்வா னந்தபோகம்
சார்ந்தசர் வாதார சர்வமங் களசர்வ சந்திதா மென்றளவிலாச்
சகுணநிர்க் குணமுறு சலட்சண விலட்சணத் தன்மைபல வாகநாடித்
தம்மைநிகர் மறையெலா மின்னுமள விடநின்ற சங்கர னநாதியாதி
சாமகீ தப்பிரியன் மணிகண்ட சீகண்ட சசிகண்ட சாமகண்ட
சயசய வெனுந்தொண்ட ரிதயமலர் மேவிய சடாமகுடன் மதனதகன
சந்திரசே கரனிடப வாகனன் கங்கா தரன்சூல பாணியிறைவன் [ன்
தனிமுதல் உமாபதி புராந்தகன் பசுபதி சயம்புமா தேவனமலன்
னாண்டவன் றலைமாலை பூண்டவன் மெய்யன்பர் தங்களுக் கருணா
[ணடவன

தன்னிகரில் சித்தெலாம் வல்லவன் வடதிசைச சைலமென மொரு
[வில்லவன்
தக்ஷணா மூர்த்தியருண் மூர்த்திபுண் ணியமூர்த்தி தகுமட்ட மூர்த்தி
[யானோன்
தலைமைபெறு கணநாய கன்குழக னழகன்மெய்ச் சாமிநற்றேவதேவன்
சம்புவே தண்டன் பிறப்பிலான் முடிவிலான் குணு முக் சண்களு
[டையான்
சதுரன் கடாசல வுரிப்போர்வை யான்செங் கழற்கரத் தேந்திநின்
[றோன்
சர்வகா ரணன்மிறற் காலகாலன் சர்வ சம்பிரமன் சர்வேச்சுரன்
தகைகொள்பர மேச்சுரன் சிவபிரா னெம்பிரான் றம்பிரான் செம்
[பொற்பதம்
தகவுபெறு நிட்பேத நிட்கம்ப மாம்பரா சத்திவடி வாம் பொற்பதம்
தக்கநிட் காடிங்யசம் வேதாகங்கசித் சத்திவடிவாம பொற்பதம்
சாற்றரிய விச்சை ஞானங்கிரியை யென்னு முச்சத்திவடிவாம் பொற்
[பதம்
தடையிலா நிர்விடய சிற்குண சிவாநந்த சத்திவடிவாம் பொற்பதம்
தகுவிந்து மோகினியை மாணயசை விக்குமொரு சத்திவடிவாம்
[பொற்பதம்
தாழ்விலீ சானமுதன் மூர்த்திவரையைஞ் சத்திதஞ்சத்தியாம் பொற்
[பதம்
சவிகற்ப நிருவிகற் பம்பெறு மனந்தமா சத்திசந்தாம் பொற்பதம்
தடநிருப வவிவர்த்த சாமர்த்திய திருவருட் சத்தியுருவாம் பொற்பதம்
தவாதசாந் தப்பதந் துவாதசாந் தப்பதந் தருமிணை மலர்ப்பூம் பதம்
சகலர்விஞ் ஞானகலர் பிரளயா கலரிதய சாக்ஷியா கியபூம்பதம்
தணிவிலா வணுபக்ஷ சம்புபக்ஷங் களிற்சமரச முறும் பூம்பதம்
தருபாஞ் சூக்குமந் தூலமிவை நிலவிய தமக்குளுயி ராம்பூம்பதம்
சாவசா வபரிமித விவிதவான் மப்பகுதி தாங்குந் திருப்பூம்பதம்

தண்டபிண் டாண்டவகி லாண்டபிர மாண்டந் தடிக்கவறு ளும்பூம்
[பதம்
தத்வராக் விகசகசி ருட்டிதிதி சங்கார சகலகர்த் தருபூம்பதம்
சகசமல விருளகல நின்மலசு யம்ப்ரகா சங்குலவு நற்பூம்பதம். (௨)

மாபுறு மசாதீத வெளிநடுவி லாநந்த மாநடன மிடும்பதம்
மன்னும்வினை யொப்புமல பரிபாகம் வாய்க்கமா மாயையை மிதிக்கும்
[பதம்
மலிபிறவி மறலியினெழுந்துமுயிர் தனையருளின் மருவுறவெடுக்கும்
[பதம்
வளர்நர்த்த வீரதாண் டவமுயற் பஞ்சக மகிழ்ந்திட வியற்றும் பதம்
வல்லமுய லகன்மீதி லூன்றிய திருப்பதம் வளர்ந்தரத் தூக்கும்பதம்
வல்வினையெ லாந்தவிர்த் தழியாத சுத்தநிலை வாய்த்திட வழங்கும்பதம்
மறைதுதிக் கும்பத மறைச்சிலம் பொளிர்பத மறைப்பாது கைச்செம்
[பதம்
மறைமுடி மணிப்பத மறைசகுமெட் டாப்பத மறைப்பரி யுகைக்கும்
[பதம்
மறையவ னுளங்கொண்ட பதமமித கோடியா மறையவர் சிரஞ்சூழ்
[பதம்
மறையவன் சிரசிகா மணியெனும் பதமலர்கொண் மறையவன் வாழ்த்
[தும்பதம்
மறையவன் செயவுலக மாகின்ற வதிகார வாழ்க்கைமீந் தருளும்பதம்
மறையவன் கனவினுங் காணாத பதமங்கு மறையவன் பரவும்பதம்
மால்விடை யிவர்ந்திடு மலர்ப்பதந் தெய்வநெடு மாலருச் சிக்கும்பதம்
மால்பரவி நாடொறும் வணங்குபத மிக்கதிரு மால்விழியி லங்கும்பதம்
மாறேட நின்றபத மோரணந் தங்கோடி மாற்றலை யலங்கற்பதம்
மான்முடிப் பதநெடிய மாலுளப் பதமந்த மாலுமறி வரிதாம்பதம்
மால்கொளவ தாரங்கள் பதினும் வழிபட்டு வாய்மைபெற நிற்கும்
[பதம்

மாலுலகு காக்கின்ற வண்மைபெற் றடிமையின் வதிந்திட வளிக்கும் [பதம்
வரையறு முருத்திரர்கள் புகழ்பதம் பலகோடி வயவுருத்திரர்சூழ்பதம்
வாய்ந்திடு முருத்திரற் கியல்கொண்முத் தொழில்செய்யும் வண்மைதந் [தருளும்பதம்
வானவிந் திராதி யெண்டிசைக் காவலர்கண் மாதவத் திறனும்பதம்
மதியிரவி யாதிசுர ரசுரரங் கரர்வான வாசிகள் வழுத்தும்பதம்
மணியுரகர் கருடர்சாங் தருவர்விஞ் சையர்சித்தர் மாமுனிவ ரேத்தும் [பதம்
மாநிருதர் பைசாசர் கிம்புருடர் யக்ஷர்கள் மதித்துவர மேற்கும்பதம்
மன்னுகின் னரர்பூதர் வித்தியா தரர்போகர் மற்றையர்கள் பற்றும் [பதம்
வண்மைபெற நந்திமுதல் சிவகண த்தலைவர்கண் மனக்கோயில் வா [ழும்பதம்
மாதேவி யெங்கண்மலை மங்கையென் னம்மையென் மலர்க்கையால் [வருடும்பதம்
மறலியை யுதைத்தருள் கழற்பத மரக்கனை மலைக்கீ ழடர்க்கும்பதம்
வஞ்சமறு நெஞ்சினிடை யெஞ்சலற விஞ்சுதிறன் மஞ்சுற விளங்கும் [பதம்
வந்தனைசெய் புந்தியவர் தந்துயர் தவிர்ந்திடவுண் மந்தணம விற்றும் [பதம்
மாறிலொரு மாறனுள மீறின்மகிழ் வீறியிட மாறிநட மாடும்பதம்
மறக்கருணை யுந்தனி யறக்கருணை யுந்தந்து வாழ்விக்கு மொண்மைப் [பதம். (௯)

இரவுறும் பகலடிய ரிருமருங கினுமுறுவ ரெணவயங் கியசீர்ப்பதம்
எம்பந்த மறவெமது சம்பந்த வள்ளன்மொழி யியன்மண மணக்கும் [பதம்
ஏவரச ரெம்முடைய நாவரசர் சொற்பதிக விசைபரி மளிக்கும்பதம்
ஏவலார் புகழெமது நாவலா ரூரர்புக லிசைதிருப் பாட்டுப்பதம்

ஏகவூர் தங்காத வாதவூ ரெங்கோவி னின்சொன்மணி யணியும்பதம்
எல்லாரு மணிமாட நல்லூரி னப்பர்முடி யிடைவைகி யருண்மென் [பதம்
எடுமேலெ னத்தொண்டர் முடிமேன் மறுத்திடவு மிடைவலிந் தே [றும்பதம்
எழில்பறவை யிசையவா ரூர்மறுகி னநள்ளொண்டி ராமுழுது முல [வும்பதம்
இன்றொண்டர் பசியறக் கச்சூரின் மனைதொறு மிரக்கநடை கொள் [ளும்பதம்
இளைப்புற லறிந்தன்பர் பொதிசோ றருந்தமு னிருந்தருபி னடக்கும் [பதம்
எறிவிறகு விற்கவளர் கூடற்றெருத்தொரு மியங்கிய விரக்கப்பதம்
இருவைகையங்கரையின் மண்படப் பல்காலெழுர் துவிளை யாடும்பதம்
எங்கேமெய் யன்பருள ரங்கேநலந் தர வெழுந்தருளும் வண்மைப்பதம்
எவ்வண்ணம் வேண்டினு மவ்வண்ண மன்றே யிரங்கியிரங் கருளும் [பதம்
என்போன்ற வர்க்குமிகு பொன்போன்ற கருணைதந் திதயத் திருக்கு [ம்பதம்
என்னுயிரை யன்னபத மென்னுயிர்க் குயிராயிலங்குசெம் பதுமப்பதம்
என்னறிவெ னும்பதமெனறிவினுக் கறிவா யிருந்தசெங் கமலப்பதம்
என்னன்பெ னும்பதமெ னன்பிற்ற வித்தா யிசைந்தகோகனகப்பதம்
என்றவமெனும்பதமென் மெய்த்தவப் பயனா யியைந்தசெஞ் சலசப் [பதம்
என்னிருகண் மணியான பதமென்கண் மணிகளுக் கினியநல் விருந் [தாம்பதம்
என்செல்வ மாம்பதமென் மெய்ச்செல்வ வருவாயெ னுந்தாம ரைப் [பொற்பதம்
என்பெரிய வாழ்வான பதமென்களிப்பா மிரும்பதமென்னிதியாம்பதம்
என்றந்தை தாயெனு மிணைப்பதமெ னுறவா மியற்பதமென் னட்பாம் [பதம்

என்குருவெ னும்பதமெ னிட்டதெய்வப்பத மெனதுகுல தெய்வப்
[பதம்
என்பொறிக ளுக்கெலா நல்விடய மாம்பதமெ னெழுமையும் விடாப்
[பொற்பதம்
என்குறையெ லாந்தவிர்த் தாட்கொண்ட பதமெனக் கெய்ப்பில்வைப்
[பாகும்பதம்
எல்லோர்க்கு நல்லபத மெல்லாஞ்செய் வல்லபத மிணையிலாத் துணை
[யாம்பதம்
எழுமணமு டைந்துடைந் துருகிநெகிழ் பத்தர்கட் கின்னமுத மாகும்
[பதம்
எண்ணுறிற் பாலினறு நெய்யொடு சருக்கரை யிசைந்தென வினிக்
[கும்பதம்
எற்றமுக் கனிபாகு கன்னல்கற் கண்டுதே னென்னமது ரிக்கும்பதம்
எங்கள்பத மெங்கள்பத மென்றுசம யத்தேவ ரிசைவழக் கிடுநற்பதம்
ஈறிலாப் பதமெலாந் தருதிருப் பதமழிவி லின்புருவு கின்றபதமே. (க)

## மஹாதேவமாலை.

கருணைநிறைந் தகம்புறமுந் துளும்பிவழிந் துயிர்க்கெல்லாங் களைகணாகித், தெருணிறைந்த வின்பநிலை வளர்க்கின்ற கண்ணுடையோய் சிதையா ஞானப், பொருணிறைந்த மறையமுதம் பொழிகின்ற மலர்வாயோய் பொய்யனேன்றன், மருணிறைந்த மனக்கருங்கற் பாறையுமுட் கசிந்துருக்கும் வடிவத் தோயே.

உலகநிலை முழுதாகி யாங்காங் குள்ள வுயிராகி யுயிர்க்குயிரா மொளிதா னாகிக், கலகநிலை யறியாத காட்சி யாகிக் கதியாகி மெய்ஞ் ஞானக் கண்ண தாகி, யிலகுசிதா காசமதாய்ப் பரமாகாச வியல்பாகி யிணையொன்று மில்லா தாகி, யலகிலறி வானந்தமாகிச் சச்சி தானந்த மயமாகி யமர்ந்த தேவே.

உலகமெலாந் தனிநிறைந்த வுண்மையாகி யோகியர்தம் மநுப வத்தி னுவப்பா யென்றுங், கலக்கமுறா வுபசாந்த நிலைய தாகிக் களங்கம ற்ற வருண்ஞானக் காட்சி யாகி, விலகலுறா நிபிடவானந்த மாகி மீதா னத் தொளிர்கின்ற விளக்க மாகி, யிலகுபரா பரமாய்ச்சிற் பரமா யன்ப ரிதயமலர் மீதிருந்த வின்பத் தேவே. (2)

வித்தாகி முளையாகி விளைவ தாகி விளைவிக்கும் பொருளாகி மேலு மாகிக், கொப்பாகிப் பயனாகிக் கொள்வோ னாகிக் குறைவாகி நிறைவாகிக் குறைவி லாத, சத்தாகிச் சித்தாகி யின்பமாகிச் சதாநி லையா யெவ்வுயிர்க்குஞ் சாக்ஷி யாகி, முத்தாகி மாணிக்க மாகித் தெய்வ முழுவயிரத் தொளிமணியாய் முளைத்த தேவே. (3)

வேதாந்த நிலையாகிச் சித்தாந் தத்தின் மெய்யாகிச் சமரசத்தின் விவேக மாகி, நாதாந்த வெளியாகி முத்தாந் தத்தி னடுவாகி நவநிலைக்கு நண்ணு தாகி, மூதாண்ட கோடியெல்லாந் தாங்கி நின்ற முதலாகி மனோதீத முத்தி யாகி, வாதாண்ட சமயநெறிக் கமையா தென்று மௌனவியோ மத்தினிடை வயங்குந் தேவே. (4)

தோன்றுதுவி தாத்துவித மாய்வி சிட்டாத் துவிதமாய்க் கேவ லாத் துவித மாகிச், சான்றசுத்தாத் துவிதமாய்ச் சுத்தந்தோய்ந்த சமர சாத் துவிதமுமாய்த் தன்னையன்றி, யூன்றுநிலை வேறொன்று மிலதா யென்று முள்ளதாய் நிரதிசய வுணர்வா யெல்லா, மீன்றருளுந் தாயா கித் தந்தையாகி யெழிற்குருவாய்த் தெய்வமதா யிலங்குந் தேவே. (5)

பரமாகிச் சூக்குமமாய்த் தூல மாகிப் பரமார்த்த நிலையாகிப் பகுத் தின் மேலாஞ், சிரமாகித் திருவருளாம் வெளியா யான்ம சிற்சத்தி யாய்ப்பரையின் செம்மை யாகித், திரமாகித் தற்போத நிவர்த்தி யாகிச் சிவமாகிச் சிவாநுபவச் செல்வ மாகி, யரமாகி யானந்த போத மாகி யானந்தா தீதமதா யமர்ந்த தேவே. (6)

இந்தியமாய்க் கரணமாய் யனைத்து மாகி யியல்புருட னாய்க்கால பரமு மாகிப், பந்தமற்ற வியோமமாய்ப் பரமா யப்பாற் பரம்பரமாய் விசுவமுண்ட பான்மை யாகி, வந்தவுப சாந்தமாய மௌன மாகி மகாமௌன நிலையாகி வயங்கா நின்ற, வந்தமிலெண் பதமாய்த் தற் பதமா யொன்று மசிபதமா யதீதமா யமர்ந்த தேவே (7)

நின்மயமா யென்மயமா யொன்றுங் காட்டா நிராமயமாய் நிருவிகற்ப நிலையாய மேலாந், தன்மயமாய்த் தற்பரமாய விமலமாகிக் கூடத் தமாய்ச் சொரூபமாயச் சகச மாகிச், சின்மயமாயச் சிற்பரமா யசல மாகிச் சிற்சொலி மாய கண்ட சிவமாயெங்கு, மன்மயமாய் வாசகா தீத மாகி மனாதீத மாயமர்ந்த மௌனத் தேவே. (8)

அளவிறந்த நெடுங்காலஞ் சித்தர்யோக ரறிஞர்மல ரயன்முதலோ ரனந்த தேவ ரளவிறந்துங் கரணகி யிரந்துஞ் செய்யுங் கடுந்தவத்துங் காண்பரிதாங் கடவு ளாகி, யுளவிறந்த வெம்போல்வா ருள்ளத் துள்ளே யூறுகின்ற தெள்ளமுத வூற லாகிப், பிளவிறந்த பிண்டாண்ட முழுதுந் தாங்கிப் பிறங்குகின்ற பெருங்கருணைப் பெரிய தேவே. (9)

வாயாகி வாயிறந்த மௌனமாகி மதமாகி மதங்கடந்த வாய்மை யாகிச், சாயாகிப் பழம்பசித் தருவாய் மற்றைக் கருவிகரணாதிகளின் கலப்பாய்ப் பெற்ற, தாயாகித் தந்தையாய்ப் பிள்ளை யாகித் தானாகி நானாகிச் சகல மாகி, யோயாத சத்தியெலா முடைய தாகி யொன்றாகிப் பலவாகி யோங்குந் தேவே. (10)

அண்டங்கள் பலவாகி யவற்றின் மேலு மளவாகி யளவாத வதீத மாகிப், பிண்டங்க ளனந்தவகை யாகிப் பிண்டம் பிறங்குகின்ற பொருளாகிப் பேதஞ் சாற்றும், பண்டங்கள் பலவாகி யிவற்றைக் காக்கும் பதியாகி யானந்தம் பழுத்துச் சாந்தங், கொண்டெங்கு நிழல்பரப்பித் தழைந்த ஞானக் கொழுங்கடவுட் டருவாகிக் குலவுந் தேவே.

பொன்னாகி மணியாகிப் போகமாகிப் புறமாகி யகமாகிப் புனித
மாகி, மன்னாகி மலையாகிக் கடலுமாகி மதியாகி ரவியாகி மற்றுமாகி,
முன்னாகிப் பின்னாகி நடுவுமாகி முழுதாகி நாதமுற முழங்கி யெங்கும்,
மின்னாகிப் பரவியின்ப வெள்ளந் தேக்கி வியன்கருணைப் பொழிமுகி
லாய் விளங்குந் தேவே. (12)

அரிதாகி யரியதினு மரியதாகி யநாசிடா பாகியா யருளதாகிப்,
பெரிதாகிப் பெரியதினும் பெரியதாகிப் பேதமா யபேதமாய்ப் பிற
ங்கா நின்ற, கரிதாகி வெளிதாகிக் கலைகளாகிக் கலைகடந்த பொருளா
கிக் காரண ரந்த, தெரிதான வெளிவெளி லருளாம் வண்மைச் செழு
ங்கிரணச் சுடராகித் திகழுந் தேவே. (13)

உருவாகி யுருவினிலுள் ளருவமாகி யுருவத்தி லுருவாகி யுரு
வுள் ளொன்ற, யருவாகி யருவினிலுள் ளருவமாகி யருவத்தி லரு
வாகி யருவுள் ளொன்றாய், கருவாகிச் சகத்தாயிற் குணத்தாகிக்
குணமாகிக் பொருளாகிக் குலவா நின்ற, மருவாகி மலராகி வல்லி
யாகி மகத்துவமா யனுக்கமாய் வயங்குந் தேவே (14)

சகலமாய்க் கேவலமாய்ச் சுத்த மாகிச் சராசரமா யல்லவாய்த்
தானே தானாய், யகலமாய்க் குறுக்கமாய் நெடுமை யாகி யவையனைத்து
மணுகாத வசலமாகி, யிகலறுத் துணையாகித் தனிய தாகி யெண்கு
ணமா யெண்குணத்தோ டிறையா யென்ற, முகலிலாத் தண்ணருள்
கொண் டுயிரை யெல்லா மூட்டி வளர்த் திடுங்கருணை யோவாத் தே
வே. (15)

வாசகமாய் வாச்சியமாய் நடுவா யந்த வாசகவாச் சியங்கடந்த
மௌன மாகித், தேசகமா யிருளகமா யிரண்டும் காட்டாச் சித்தக
மாய் வித்தகமாயச் சிறிதும் பந்த, பாசமுறாப் பதியாகிப் பசுவுமாகிப்
பாசநிலை யாகியொன்று மபகரா தாகி, நாசமிலா வெளியாகி யொளி
தானாகி நாதாந்த முடிவிடை நவிற்றுந் தேவே (16)

சகமாகிச் சீவனா யீச னாகிச் சதுமுகனாய்த் திருமாலா யரன்றா னாகி, மகமாயை முதலாய்க்கூ டத்தனாகி வான்பிரம மாகியல்லா வழக்கு மாகி, யிகமாகிப் பரமாகிச் சமய கோடி யெத்தனையு மாகியவை யெட்டா வான்கற், பகமாகிப் பரமாகிப் பரம மாகிப் பராபரமாய்ப் பரம்பரமாய்ப் பதியுந் தேவே. (17)

விதியாகி யரியாகிக கிரீச னாகி விளங்குமகேச் சுரனாகி விமல மான, சிதியாகுஞ் சதாசிவனாய் விந்து வாகி நிகழ்நாத மாய்ப்பரையாய் நிமலா னந்தப், பதியாகும் பரசிவமாய்ப் பரமாய் மேலாய்ப் பக்கமிரண் டாயிரண்டும் பகரா தாகிக, கதியாகி யாவிறந்த ததிக மெல்லாங் கடந்துநின்று நிறைந்தபெருங் கருணைத் தேவே. (18)

மானாகி மோகினியாய் விந்து வாகி மற்றவையாற் காணாத வான மாகி, நானாகி நானல்ல னாகி நானே நானாகும் பதமாகி நான்றான் கண்ட, தானாகித் தானல்ல னாகித் தானே தானாகும் பரமாகிச் சகச ஞான, வானாகி வானவெளி விளங்கு கின்ற மௌனநிலை யாகியெங்கும் வளருந் தேவே. (19)

மந்திரமாய்ப் பதமாகி வன்ன மாகி வளர்கலையாய்த் தத்துவமாய்ப் புவன மாகிச், சந்திரனா யிந்திரனா யிரவி யாகித் தானவராய் வானவ ராய்த் தயங்கா நின்ற, தந்திரமா யிவையொன்று மல்ல வாகித் தானாகித் தனதாகித் தானென் காட்டா, வந்தரமா யப்பாலா யதற்கப் பாலா யப்பாலுக் கப்பாலா யமர்ந்த தேவே (20)

மலைமேலுங் கடன்மேலு மலரின் மேலும் வாழ்கின்ற மூவருவின் வழங்குஞ் சோவே, நிலைமேலு நெறிமேலு நிறுத்து கின்ற நெடுந் தவத்தோர் நிரைமேலு நிகழ்த்தும் வேதங், கலைமேலு மெம்போல்வா ருளத்தின் மேலுங் கண்மேலுந் தோண்மேலுங் கருத்தின் மேலுந், தலைமேலு முயிர்மேலு முணர்வின்மேலுஞ் சதுமன்பின் மேலும்வளர் தாண்மெய்த் தேவே. (21)

பொற்குன்றே யகம்புறமும் பொலிந்து நின்ற பூரணமே யாரணத்துட் பொருளே யென்றுங், கற்கின்றோர்க் கினியசுவைக் கரும்பே தானக் கற்பகமே கற்பகத்தின் கனியே வாய்மைச், சொற்குன்றா நாவகத்துண் மாறா வின்பந் தோற்றுகின்ற திருவருட்சீர்ச் சோதியே விண், ணிற்கின்ற சுடரேயச் சுடருள் ளோங்கு நீளொளியே யவ்வொளிக்கு ணிறைந்த தேவே. (22)

தேசுவிரிக் திருளகற்றி யென்று மோங்கித் திகழ்கின்ற செழுங்கதிரோ செறிந்த வாழ்க்கை, மாசுவிரித் திடுமனத்திற் பயிலாத் தெய்வ மணிவிளக்கே யானந்த வாழ்வே யெங்கு, காசுவிரித் திடுமொளி போற் கலந்து நின்ற காரணமே சாந்தமெனக் கருதா நின்ற, தூசுவிரித் துடுக்கின்றோர் தம்மை நீங்காச சுகமயமே யருட் கருணை தூலங்குந் தேவே. (23)

கோவேயெண் குணக்குன்றே குன்றா ஞானக் கொழுந்தேனே செழும்பாகே குளிர்ந்த மோனக், காவேமெய் யறிவின்ப மயமே யென்றன் கண்ணேமுக் கண்கொண்ட கரும்பே வானத், தேவேயத் தேவுக்குந் தெளிய வொண்ணாச் தெய்வமே வாடாமற் றிகழ்சிற் போதப், பூவேயப் பூவிலுறு மணமே யெங்கும் பூரணமாய் நிறைந் தருளும் புனிதத் தேவே. (24)

வானேயவ் வானுலவுங் காற்றே காற்றின் வருநெருப்பே நெருப்புறுநீர் வடிவே நீரிற், றானேயும் புவியேயப் புவியிற் றங்கு தாபரமே சங்கமமே சாற்றா நின்ற, வூனேநல் லுயிரேயுள் ளொளியே யுள்ளத் துணர்வேயவ் வுணர்வுகலந் தூறு கின்ற, தேனேமுக் கனியேசெங் கரும்பே பாகின் றீஞ்சுவையே சுவையனைத்துந் திரண்ட தேவே. 25

விண்ணேவிண் ணுருவேவிண் முதலே விண்ணுள் வெளியேயவ் வெளிவிளங்கு வெளியே யென்றன், கண்ணேகண் மணியேகண் ணொளியேகண் ணுட் கலந்துநின்ற கதிரேயக் கதிரின் வித்தே, தண்

ணே தண் மதியே யம் மதியிற் பூத்த தண்ணமுதே தண்ணமுத சாரமே சொற், பண்ணே பண் ணிசையே பண் மயமே பண்ணின் பயனே மெய்த் தவர்வாழ்த்திப் பரவுந் தேவே. (26)

மாணேயத் தவருளத்தே மலர்ந்த செந்தா மரைமலரின் வயங்குகின்ற மணியே ஞானப், பூணேமெய்ப் பொருளேயற் புதமே மோனப் புத்தமுதே யானந்தம் பொலிந்த பொற்பே, யாணேபெண் ணுருவமே யலியே யொன்று மல்லாத பேரொளியே யனைத்துந் தாங்குந், தூணேசிற் சுகமேயச் சுகமேற் பொங்குஞ் சொரூபானந் தக்கடலே சோதித் தேவே. (27)

பூதமே யவைதோன்றிப் புகுந்தொடுங்கும் புகலிடமே யிடம்புரிந்த பொருளே போற்றும், வேதமே வேதத்தின் விளைவே வேத வியன்முடிவே யம்முடிவின் விளங்குங் கோவே, நாதமே நாதாந்த நடமே யந்த நடத்தினையுண் ணடத்துகின்ற நலமே ஞான, போதமே போதமெலாங் கடந்து நின்ற பூரணமே யோகியருட் பொலிந்த தேவே. 28

ஞாலமே ஞாலமெலாம் விளங்க வைத்த நாயகமே கற்பமுத னவிலா நின்ற, காலமே காலமெலாங் கடந்த ஞான கதியேமெய்க் கதியளிக்குங் கடவுளே சிற், கோலமே குணமேயுட் குறியேகோலங் குணங்குறிகள் கடந்துநின்ற குருவே யன்பர், சீலமே மாலறியா மனத்திற் கண்ட செம்பொருளே யும்பர்பதரு செழிக்குந் தேவே. (29)

தத்துவமே தத்துவா தீதமே சிற் சயம்புவே யெங்குநிறை சாக்ஷியே மெய்ச், சத்துவமே சத்துவத்தின் பயனே யின்பந் தந்தருளும் பெருவாழ்வாஞ் சாமியே யெஞ், சித்தநிலை தெளிவிக்கு மொளியே சற்றுந் தெவிட்டாத தெள்ளமுதே தேனே யென்றுஞ், சுத்தநெறி திறம்பாதா ரறிவிற் றோய்ந்த சுகப்பொருளே மெஞ்ஞானந் துலங்குந் தேவே. (30)

முளமுழுதுங் கலந்து கொண்டு தித்திக்குஞ் செழுந்தேனே தேவ தேவே. (35)

அளவையெலாங் கடந்துமனங் கடந்து மறை யறிவையெலாங் கடந்துகடந் தமல போதக், குளவையெலாங் கடந்துபரங் கடந்துமேலே பொன்றுகடந் திரண்டுகடந் துணர்ச்சி சூழ்ந்த, களவையெலாங் கடந்துகண்ட பிண்ட மெல்லாங் கடந்து நிறை வானசுகக் கடலே யன்பர், வளவையெலா மிருள்கற்ற மொளியே மோன வாழ்வேயென் னுயிர்க்குயிராய் வதியுந் தேவே (36)

வன்புகலந் தறியாத மனத்தோர் தங்கண் மனங்கலந்து மதிகலந்து வயங்கா நின்ற, வென்புகலந் தூன்கலந்து புலன்களோடு மிந்திரிய மனைகலந்துள் ளியங்குகின்ற, வன்புகலந் தறிவுகலந் துயிரைம் பூதமானமாவுங் கலந்துகலந் தண்ணித் தூறி, யின்புகலந் தருள்கலந்து ததும்பிப் பொங்கி யெழுங்கருணைப் பெருக்காறே யின்பத் தேவே

தண்ணமுத மதிகுளிர்ந்த கிரணம் வீசத் தடம்பொழிற்பூ மணம் வீசத் தென்றல் வீச, வெண்ணமுதப் பனிக்குநிலா முற்றத் தேயின் னிசைவீசத் தண்பனிநீ ரெங்குந் தூவீசப், பெண்ணமுத மனையவா விண்ணமுத மூட்டப் பெறுகின்ற சுகமனைத்தும் பிறபட் டோடக், கண்ணமுதத் திட்டமுயிர் மற்றனைத்து மின்பங் கலந்துகொள்ளத் தருங்கருணைக் கடவுட் டேவே. (38)

சுழியாத வருட்கருணைப் பெருக்கே யென்றுந் தூண்டாத மணிவிளங்கின் சோதி யேவா, னொழியாது கதிர்பரப்புஞ் சுடரே யன்பர்க் கோவாத வின்பருளு மொளியே யண்ணே, விழியாலு மொழியாலு மனத்தி னாலும் விழைந்தருமெய்த் தவத்தாலும் விளம்பு மெந்த, வழியாலுங் கண்டுகொளற் கரிதாய்ச் சுத்த மௌனவெளி யூடிருந்து வயங்குந் தேவே. (39)

மயமாய் நின்மலமே மணந்து நீங்கா, வாதரவோ டியன்மௌனச் சுவைமேன் மேற்கொண் டானந்த ரசமொழுக்கி யன்பா லென்றுஞ், சேதமுறு வறிஞருளந் தித்தித் தோங்குஞ் செழும்புனிதக் கொழுங் கனியே தேவ தேவே. (44)

உடல்குளிர வுயிர்தழைக்க வுணர்ச்சி யோங்க வுளங்கனிய மெய் யன்ப ருள்ளத் தூடே,கடலனைய பேரின்பந் தளும்ப நாளுங் கருணை மலர்த் தேன்பொழியுங் கடவுட் காவே, விடலரிய வெம்போல்வா ரிதயந் தோறும் வேதாந்த மருந்தளிக்கும் விருந்தே வேதந், தொடல ரிய வெளிமுழுதும் பரவிஞானச் சோதி விரித் தொளிர்கின்ற சோ தித் தேவே. (45)

கிரியைநெறியகற்றிமறை முடிவினின்று கேளாமற் கேட்கின்ற கேள்வி யேசொற், கரியவரை விடுத்துநவ நிலைக்கு மேலே காணமற் காண்கின்ற காட்சி யேயுள், ளரியநிலை யொன்றிரண்டி னடுவே சற்று மறியாம லறிகின்ற வறிவே யென்று, முரியசுகா நிலைநின்ற வுணர்ச்சி மேலோ ருன்னும லுன்னுகின்ற வொளியாந் தேவே (46)

சொற்போதற் கரும்பெரிய மறைக ளுடித் தொடர்ந்து தொட ர்ந் தயர்ந்திளைத்துத் துளங்கி யேங்கிப், பிற்போத விரைந்தன்ப ருள த்தே சென்ற பெருங்கருணைப் பெருவாழ்வே பெயரா தென்றுந், தற் போத வொழிவிலிடை நிறைந்து பொங்கித் ததும்பிவழிந் தோங்கி யெல்லாந் தானே யாகிச், சிற்போதத் தகம்புறமுங் கோத்து நின்ற சிவானந்தப் பெருக்கேமெய்ச் செல்வத்தேவே. (47)

பொங்குபல சமயமெனு நதிக ளெல்லாம் புகுந்தலகந் நிடநிறை வாய்ப் பொங்கி யோங்குங், கங்குகரை காணாத கடலே யெங்குங் கண் ணாகக் காண்கின்ற கதியே யன்பர், தங்கநிழல் பரப்பிமயற் சோடை யெல்லாந் தணிக்கின்ற தருவேபூந் தடமே ஞானச், செங்குமுத மல ரவரு மதியே யெல்லாஞ் செய்யவல்ல கடவுளே தேவ தேவே. (48)

வான்காணா மறைகாணா மலரோன் காணான் மால்காணா னுருத்திரனு மதித்துக் காணா, ஞான்காணா விடத்ததனைக் காண்பே மென்று நல்லோர்க ணவில்கின்ற நலமே வேட்கை, யான்காணா வுளக்கமல மலர்ந்தா ரின்ற வான்சுடரே யானந்த மயமே யீன்ற, வான்காணா விளங்கன்று யமலமந் தேகத மன்பர்தமைக் கலந்துகொளு மமலத் தேவே. (49)

மெய்ஞ்ஞான விருப்பமதி லேறிக் கேள்வி மீதேறித் தெளிந்திச்சைவிடுத லேறி, யஞ்ஞான மற்றபடி யேறி யுண்மை யறிந்தபடி நிலை யேறியதுநா னென்னுங், கைஞ்ஞானங் கழன்றேறி மற்றவெல்லாங் கடந்தேறி மௌனவியற் கதியி லேறி, மெஞ்ஞான மறுத்தெளிந்தோர் கண்டுங் காணே மென்கின்ற வநுபவமே யின்பத் தேவே. (50)

பற்றறியா முத்தர்தமை யெல்லாம் வாழைப் பழம்போல விழுங்குகின்ற பரமே மாசு, பெற்றறியாப் பெரும்பதமே பதத்தைக் காட்டும் பெருமானே யானந்தப் பேற்றின் வாழ்வே, யுற்றறியா தின்னுமின்னு மறைக ளெல்லா மோலமிட்டுத் தேடநின்ற வொன்றே யொன்றுங், கற்றறியாப் பேதையேன் றனக்கு யின்பங் கனிந்தளித்த வருட்கடலே கருணைத் தேவே. (51)

மெய்யுணர்ந்த வாதவூர் மலையைச் சுத்த வெளியாக்கிக் கலந்துகொண்ட வெளியே முற்றும், பொய்யுணர்ந்த வெமைப்போல்வார் தமக்கு மின்பம் புரிந்தருளுங் கருணைவெள்ளப் பொற்பேயன்பர், கையுறைந்து வளர்நெல்லிக் கனியே யுள்ளங் கரைந்து கரைந் துருக வவர் கருத்தி னூடே, யுய்யநெறி யொளிகாட்டி வெளியு முள்ளு மோங்குகின்ற சுயஞ்சுடரே வுண்மைத் தேவே. (52)

ஒலிவடிவு நிறஞ்சுவைக ளூற்ற மூற்ற முறுதொழில்கள் பயன்பலவே றுளவா யெங்கு, மலிவகையா யெவ்வகையு மொன்று யொன்று மாட்டாதா யெல்லாமு மல்ல தாகிச், சலிவகையில் லாத

பாயகுளநாந் தெரிந்துமௌனர் துணிந்து கோடிப் பழமறைகடனி த்தனியே பாடிப் பாடி, யீங்குளதென் றங்குளதென் றோடி யோடி யிளைத்திளைத்துத் தொடர்ந்துதொடர்ந் தெட்டுந் தோறும், வாங்குபர வெளிமுழுது நீண்டு நீண்டு மறைந்துமறைந் தொளிக்கின்ற மணியே யெங்குந், தேக்குபர மானந்த வெள்ளமேசச் சிதானந்த வருட்சிவமே சேவ தேவே. (58)

எழுத்தறிந்த தமையுணர்ந்த யோகர் குள்ளத் தியலறிவாந் தருவி னிலன் பெனுமோ ருச்சி, பழுத்தனிந்து மௌனநறுஞ் சுவைமேற் பொங்கிப் பரம்பொருந்த வனுபவிக்கும் பழமே மாயைக், கழுத்தரிந்து கருமமலத் தலையை வீசுங் கடுந்தொழிலோர் தமக்கேநற் கருணை காட்டி, விழுத்துணையா யமர்ந்தருளும் பொருளே மோன வெளியினிறை யானந்தவிளைவாந் தேவே. (59)

உருத்திரர்நா ரணர்பிரமர் விண்ணோர் வேந்த ருரககருடர் காந்தருவரியக்கர் பூதர், மருத்துவர்போ கியர்சித்தர் முனிவர் மற்றை வானவர்கண் முதலோர்தம் மனத்தாற் றேடிக், கருத்தழிந்து தனித்தனியே சென்று வேதங்களை வினவ மற்றவையுங் காணே மென்று, வருந்த முற்றங் கவரோடு புலம்ப நின்ற வஞ்சவெளி யேயின்பமயமாந் தேவே.

பாயிரமா மறையனந்த மனந்த மின்னும் பார்த்தனந்த காண்டு மெனப் பல்கான் மேவி, யாயிரமா யிரமுகங்க ளாலும் பன்னு ளளந்தளந்தோ ரணுத்துணையு மளவு காணா, தாயிரங்கி யழுதசிவ சிவவென் றேங்கித் திரும்பவருட் பரவெளிவாழ் சிவமே யீன்ற, தாயிரங்கி வளர்ப்பதுபோ லெம்போல் வாரைத் தண்ணருளால் வளர்த்தென்றுந் தாங்குந் தேவே. (61)

அந்தரமிங் கறிவோமற் றதனி லண்ட மடுக்கடுக்கா யமைந்தவள வறிவோ மாங்கே, யுந்துறும்பல் பிண்டநிலை யறிவோஞ்சீவ னூற்ற

நிலை யறிவோமற் றனைத்து நாட்டு, மெங்ஙனதின தருள்விளையாட் டங்ஙேதோ வாதோ வெள்ளளவு மறிந்திலோ மென்னே யென்று, மூந் துணிந்த மறைகளெல்லாம் வழுத்த நின்ற முழுமுதலே யன்பர்குறை முடிக்குந் தேவே. (62)

தோன்றுபர சாக்கிரமுங் கண்டோ மந்தச் சொப்பனமுங் கண் டோமேற் சுழுத்தி கண்டோ, மான்றபர துரியநிலை கண்டோ மப்பா லதுகண்டோ மப்பாலா மதுவுங் கண்டோ, மேன்றவுப சாந்த நிலை கண் டோ மப்பா லிருந்தநினைக் காண்கிலோ மென்னே யென்று, சான்ற வுப னிடங்களெலாம் வழுத்த நின்ற தன்மயமே சின்மயமே சகசத் தேவே. (63)

பரிகிரக நிலைமுழுதுந் தொடர்ந்தோ மேலைப் பரவிந்து நிலை யனைத்தும் பார்த்தோம் பாசு,மெரிக்குமியற் பரநாத நிலைக்க ணெல்லை யெய்தினோ மப்பாலு மெட்டிப் போனோந், தெரிககரிய வெளிமூன் றுந் தெரிந்தோ மெங்குஞ் சிவமேநின் சின்மயமோ சிறிதுந் தேரோந், தரிக்கரிதென் றாகமங்க ளெல்லாம் போற்றத் தனிநின்ற பரம்பொ ருளே சாந்தத் தேவே. (64)

மணக்குமலர்த் தேனுண்ட வண்டே போல வளர்பரமா னந்த முண்டு மகிழ்ந்தோ ரெல்லா, மிணக்கமுறக் கலந்துகலந் ததீத மாதற் கியற்கைநிலை யாந்ததுதா னெமமாற் கூறுங், கணக்குவழக் கனைத் தினையுங் கடந்த தந்தோ காண்பரிதிங் கெவர்க்குமெனக் கலைக ளெல்லாம், பிணக்கறநின் றோலமிட நனித்து நின்ற பெரும்பதமே மதாதீதப் பெரிய தேவே. (65)

பொதுவென்றும் பொதுவினடம் புரியா நின்ற பூரணசிற் சிவமென்றும் போதா னந்த, மதுவென்றும் பிரமமென்றும் பரம மென்றும் வகுக்கின்றோர் வகுக்கிடுக வதுதா னென்று, மிதுவென றுஞ் சுட்டவொணா ததனாற் சும்மா விருப்பதுவே தனிவெனக

கொண்டிருக்கின் றோரை, விதுவென்ற தண்ணளியாற் கலந்து
கொண்டு விளங்குகின்ற பெருவெளியே விமலத் தேவே. (66)

அருமறையா கமங்கண்முத னடுவீ றெல்லா மமைந்தமைந்து
மற்றவைக்கு மப்பா லாகிக், நமறைந்த வுயிர்கடொறுங் கலந்துமே
விக் கலவாமற் பன்மையறியுங் கடந்து ஞானத், திருமணிமன் றகத்தி
ன்ப வுருவா யென்றந் திகழ்கருணை நடம்புரியுஞ் சிவமே மோனப்,
பெருமலையே பரமவின்ப நிலையே முக்கட் பெருமானே யெத்திறத்
தும் பெரிய தேவே. (67)

என்னுயிர்நீ யென்னுயிர்க்கோ ருயிரு நீயென் னின்னுயிர்க்குத்
துணைவநீ யென்னை யீன்ற, வன்னைநீ யென்னுடைய வப்பனீயென்
னரும்பொருணீ யென்னிதயத் தன்பு நீயென் னன்னெறிநீ யெனக்
குரிய வுறவு நீயென் னற்குருநீ யெனைக்கலந்த நட்பு நீயென், றன்னு
டைய வாழ்வுநீ யென்னை யாக காக நந் தலைவனீ கண்மூன் றுதழைத்த
தேவே. (68)

தானாகி யானல்ல தொன்றுமில்லாத் தன்மயமா யெவையெவைக்
குந் தலைவனாகி, வானாகி வளியனலாய் நீரு மாகி மலர்தலைய வுலகாகி
மற்று மாகித், தேனாகித் தேனினறுஞ் சுவையு மாகித் தீஞ்சுவையின்
பயனாகித் தேடு கின்ற, நானாகி யென்னிறைவ னாய நின்றோய் நின்னை
நாயடியே னெவ்வாறு நவிற்று மாறே. (69)

ஆனேறும் பெருமானே யரசே யென்ற னாருயிருக் கொருது
ணையே யமுதே கொன்றைத், தேனேறு மலர்ச்சடையெஞ் சிவனே
தில்லைச் செழுஞ்சுடரே யானந்தத் தெய்வ மேயென், னூனேறு
முயிர்க்குணிறை யொளியே யெல்லா முடையானே நின்னடிச்சீ
ருன்னி யன்பர், வானேறு கின்றார்நா னொருவன் பாவி மண்ணேறி
மயக்கேறி வருந்துற் றேனே. (70)

செஞ்சடையெம் பெருமானே சிறுமா னேற்ற செழுங்கமலக் கரத்தவனே சிவனே சூழ்ந்து, மஞ்சடையு மதிற்றில்லை மணியே யொற்றி வளர்மருந்தே யென்னுடைய வாழ்வே வேட்கை, யஞ்சடைய வஞ்சியர்மா லடைய வஞ்ச மடையநெடுந் துயரடைய வகன்ற பாவி, நெஞ்சடைய நினைசியோ நினைதி யேன்மெய்ந் நெறியுடையார் நெஞ்சமர்ந்த நீதா னன்றே. (71)

அன்னையினும் பெரிதினிய கருணை யுட்டு மாரமுதே யென்னு றவே யரசே யிந்த, மன்னுலகி லடியேனை யென்னே துன்ப வலையி லகப் படவியற்றி மறைந்தா யந்தோ, பொன்னைமதி திடுகின்றோர் மருங்கே சூழ்ந்து போனகமும் பொய்யுறவும் பொருந்த லாற்றே, னென்னையுமை கொள்ளுதியோ கொள்கி லாயோ வென்செய்வே னெசெய்வே னென்சேய் வேனே. (72)

படித்தேன்பொய் யுலகியனூ லெந்தாய் நீயே படிப்பித்தா யன்றி யுமப் படிப்பி விசை, யொடித்தேனு னொடித்தேனே வொடிப்பித் தாய்பின் னுன்னடியே துணையெனநா னுறுதி யாகப், பிடித்தேன் மற் றதுவுநீ பிடிப்பித் தாயிப் பேதையே னின்னருளைப் பெற்றோர் போல, நடித்தேனெம் பெருமானீ யொன்று நானே நடித்தேனே வல்லதுநீ நடிப்பித் தாயோ (73)

மத்தேறி யலைதயிர்போல் வஞ்ச வாழ்க்கை மயலேறி விருப்பேறி மதத்தி னோடு, பித்தேறி யுழல்கின்ற மனத்தா லந்தோ பேயேறி நலிகின்ற பேதை யானேன், வித்தேறி விளைவேறி மகிழ்கின் றோர்போன் மேலேறி யன்பரெலாம விளங்கு கின்றா, ரொத்தேறி யுயிர் குயிராய் நிறைந்த வெங்க ளுடையானே யிதுதகுமோ வுணர்கி லேனே

மதியணிந்த முடிக்கனியே மணியே யெல்லாம் வல்லவருட் குருவேநின் மலர்த்தாள் வாழ்த்திக், கதியணிந்தா ரன்பரெலா மடியே னொன்றுங் கண்டறியேன் கருமத்தாற் கலங்கி யந்தோ, பொதிய

ணிந்து திரிந்துழலு மேறு போலப் பொய்யுலநிற் பொய்சுமந்து புல
ம்பா நின்றேன், றநியனிக நின்னருளொன் றனக்கு முண்டோ
விக்கெறனிலிப் பாவியேன் சொல்வ தென்னே. (75)

என்னரசே யென்னுயிரே யென்னை யீன்ற வென்றாயே யென்
குருவே வெளியே யெங்கே, தன்னரசே செலுத்தியெங்கு முழலா
நின்ற சஞ்சலநெஞ்சகத்தாலே தயங்கி யங்கோ, மின்னரசே பெண்
ணமுதே யென்று மாயா வெய்யசிறு நீரகத்திற் சண் விழுவே பெண்
ணாக, கொன்னனைரசேர் கிழக்குருடன் கோல்போல் வீணே குப்புறு
கின் றேன்மயலிற் கொடிய னேனே. (76)

அல்லிலங்கு செழுஞ்சுடரா யடியா ருள்ளத் தமர்ந்தருளுஞ் சிவ
குருவே யடியே னிங்கே யில்லிலங்கு மடமாதெனன்றே யெந்தா யந்
தவிருப்புவிலங்கினையொழிந் தென்னே யின்னு, மல்லிலங்கு மாத்
தையாசை மாசை யென்னும் வல்விலங்கு பூண்டதோ மயங்கி நின்
றேன், புல்விலங்கு மிதுசெய்யா வோகோ விராப் புலைநாயேன் பிழை
பொறுக்கிற் புதிதே யன்றே. (77)

வன்கொடுமை மலநீக்கி யடியார் தம்மை வாழ்விக்குங் குருவே
நின் மலர்த்தா ளெண்ணை, முன்கொடுசென் றிடுமடியேன் றன்னை
யிந்த மூடமனை மிவ்வுலக முயற்சி நாடிப், பின்கொடுசென் றலைத்தி
ழுக்குதந்தோ நாயேன் பேய்பிடித்த பித்தனைப்போற் பிதற்ற நின்றே
னென்கொடுமை யெனபாவ மெந்தா யெந்தா யென்னுரைப்பே னெங்
குருவே னென்செய வேனே, (78)

உய்க்குவித்து மெய்யடியார் தம்மை யெல்லா முண்மைநிலை பெற
வருளு முடையா யிங்கே, மைக்குவித்து நெடுங்கண்ணார் மயக்கி லாழ்ந்து
வருந்துகின்றே னல்லாலுன் மலர்த்தா ளெண்ணிக், கைக்குவித்துக
கண்களினீர் பொழிந்து நானோர் கணமேனுங் கருதிப்பின்னைக் கலந்த

துண்டோ, செய்குவித்துக் கொள்ளுதியோ கொள்கிலாயோ திருவுளத்தை யறியேனென் செய்த வேனே. (79)

அருள்வெளியி லானந்த வடிவினொனின் றடுகின்ற பெருவாழ்வே யரசே யிந்த, மருள்வலையி லகப்பட்ட மனத்தா லந்தோ மதிகலங்கி மெய்ந் நிலைக்கோர் வழிகாணேனே, யிருணெறியிற் கோலிழந்த குருட்டே மன்போ லெண்ணமெலா மெண்ணி யேங்கி யேங்கி, யுருள்சகடக் கால்போலுஞ் சுழலா நின்றே னுய்யும்வகை யறியேனிவ் வொறிய னேனே. (80)

கற்றவரை தனக்குமுண வளிக்கு முன்றன் கருணைநிலை தனையறியேன் கடையே னிங்கே, யெற்றவரை யெறும்பேபோற் றிரிந்து நாளுமிளைத் துநினை யருள்காணேனந்தோ யந்தோ,பெற்றவரைக் காணாத பிள்ளை போலப் பேதுறுகின் றேன்செய்யும் பிழையை நோக்கி, யிற்றவரைக் கேள்விடல்போல் விடுதி யேல்யா னென்செய்வே னெவ்கு றுவே னென்சொல் வேனே. (81)

அடிமைசெயப் புகுந்திடுமெம் போல்வார் குற்ற மாயிரமும் பொறுத்தருளு மரசே நாயேன், கொடுமைசெயு மனத்தாலே வருந்தி யந்தோ குரங்கின்கை மாலையெனக் குலையா நின்றேன், கடுமைசெயப் பிறர்துணிந்தா லடிமை தன்னைக் கண்டிருக்க லழகன்றே கருணைக் கெந்தாய், செடிமையுளப் பாதகனே னென்செய் வேனின் றிருவுளத்தை யறிந்திலேன் றிகைக்கின் றேனே. (82)

கூம்பாத மெயநெறியோ ருளத்தே யென்றுங் குறையாத வின்பளிகருங் குருவே யாசைத், தாம்பாலே யாப்புண்டு வருந்தி நாயேன் றையலார் மையலெனுஞ் சலதி யாழ்ந்து, வோம்பாம லுவர்நீருண் டுயங்கு கின்றே னுன்னடியா ரக்கரைமே லுவர்து நின்றே, தீம்பாலுஞ் சர்க்கரையுந் தேனு நெய்யுந் தேக்குகின்றா ரிதுதகுமோ தேவ தேவே.

வெள்ளமணி சடைக்கனியே யூவாகி விரிந்தருளு மொரு தனியே விழல னேனை, கள்ளமனக் குரங்காட்டு மாட்ட மெல்லாங் கண்டிருந்து மிரங்கிலையேற் கவலை யாலே, யுள்ளமெலிந் துழல்கின்ற சிறியேன் பின்ன ருய்யும்வகை யெவ்வகையோ துன்னுங் கோறும், பொள்ளெனமெய் வியர்க்கவுளம் பதைக்கச் சோபம் பொங்கிவழி கின்றது நான் பொறுக்கி லேனே. (84)

எனையறியாப் பருவத்தே யாண்டு கொண்ட வென்னரசே யென்குருவே யிறையே யின்று, மனையறியாப் பிழைகருது மகிழ்நன் போல மதியறியேன் செய்பிழையை மனத்துட் கொண்டே, தனையறியா முகத்தவர்போ லிருந்தா யெந்தாய் தடங்கருணைப் பெருங்கடற்கு தகுமோ சண்டா, யனையறியாச் சிறுகுழவி யாகி யிங்கே யடிநாயேனரற்றுகின்றே னந்தோ வந்தோ. (85)

தீவினைநல் வினையெனும்வன் கயிற்றா லிந்தச் சீவர்களை யாட்டுகின்ற தேவே நாயே, னேவினைநேர் கண்மடவார் மையற்பேயா லிடருழந்துஞ் சலிப்பின்றி யென்னே பின்னு, நாவினையென் பால்வருந் திக சரண்டு கின்ற நாயகநனை தோன்ற நின்று நயக்கின் றேனு, ஞவினைவிட் டெருதுகறந் திடுவான் செல்லு மறிவிலிக்கு மறிவிலியே னுவாறே. (86)

எம்பெருமா னின்விளையாட் டென்சொல் கேனு னேதுமறியாச்சிறியே னெனைநகா னிங்கே, செம்புனலாற் றசைநரம்புலாற் சுவர்சூழ் பொதைச் சிறுவீட் டிலிருட்டறையிற் சிறைசெய் தந்தோ, கம்பமுறப் பசித்தழலுங் கொளுந்த வந்தக் கரணமுதற் பொறிபுலப் பேய் கவர்ந்து சூழ்ந்த, வம்பியற்றச் காமாதி யரட்ட ரெல்லா மடிபிடித்து வருத்தவென்றோ வளர்த்தா யெந்தாய். (87)

அம்பரத்தே யானந்த வடிவா லென்று மாடுகின்ற மாமணியே யரசே நாயே, னிம்பரத்த மெனுமுலக நடையி லந்தோ விடருழந்தேன்

பன்னெறியி லலையிழுத்தே, பம்பரத்தி னாடியலைப் படுத்து மிந்தப் பாவிமன மெனைஉருவயப் படுவ தில்லை, கொம்பரற்ற விளங்கொடி போற் றளர்ந்தே னென்னைக் குறிக்கொளக் கருதுதியோ குறித்தி டாயோ. (88)

கண்ணுடைய நுதற்கரும்பே மன்றி லாடுங் காரணகா ரியங்கடந்த கடவுளே நின், றண்ணுடைய மலரடிக்கோர் சிறிது மன்பு சார்ந்தேனோ செம்மரம்போற் றணிந்த நெஞ்சேன், பெண்ணுடைய மயலாலே சுழல்கின் றேனென் பேதைமையை யென்புகல்வேன் பேயனேனைப், புண்ணுடைய புழுவிரும்பும் புள்மொன்கேனோ புலைவிழைந்து நிலைவெறுத்தேன் புலையனேனே. (89)

பொன்னுடையா ரிடம்புகவோ வவர்கட் கேற்பப் பொய்மொழிகள் புகன்றிடவோ பொருதிபோ லிந்தக், கொன்னுடையா வுடல்பருக்கப் பசிக்குச் சோறு கொடுக்கவோ குளிர்க்காடை சொளவோ வஞ்ச, மின்னிடையார் முடைச்சிறுநீர்க் குழிக்கணந்தோ வீழ்ந்திடவோ தாழ்ந்திளைத்து விழிக்கவோ நா, னென்னுடையா யென்னுடையா யென்னை யிங்கே யெடுத்துவளர்த் தனையறியே னென்சொல்வேனே. 90

வருகணந்து வாழ்ந்திடுமோ வீழுமோ விந்த மலக்கூடென் றறிஞரெலாம் வருந்தக் கேட்டு, மருகனைத்துக் கொளப்பெண்பே யெங்கே மேட்டுக் சுடைந்திடவெண் சோறெங்கே யாடை யெங்கே, யிருகணுக்கு வியப்பெங்கே வசதியான விடமெங்கே யென்றுதிரிந் திளைத்தே னல்லா, லொருகணந்து முனைநினைந்த துண்டோ வென்னையுடையானே யெவ்வகைநா னுய்யு மாறே. (91)

பொன்மலையோ சிறிதெனப்பே ராசை பொங்கிப் புவிநடையிற் பற்பலகாற் போந்து போந்து, நென்மலையோ நிதிமலையோ வென்று தேடி நிலைகுலைந்த தன்றியுனை நினைந்து நேடி, மன்மலையோ மாம

ணியோ மருந்தோ வென்று வழுத்தியே யிலையிந் நெஞ்ச நெஞ்சங்,
கன்மலையோ விரும்போசெம் மரமோ பாறைக் கருங்கல்லோ பராய
முருட்டுக் கட்டை யேயோ (92)

தம்மை மறந்த குளமுக முண்டு கேக்குந் தகையுடையார் திருக்
கூட்டஞ் சாரா நாயேன், வெம்மையெலாந் தவிராது மனங் குளிரக்
கேள்வி யிருந்தருந்த மெய்யறிவாம் வீட்டி லென்றுஞ், செம்மையெ
லாந் தருமெளன வீணமேற் கொண்டு செறியிரவு பகலென்றுந்
தெரியா வண்ணம், இம்மையிலே யெம்மையிலுஞ் சாரச் சுத்த வின்ப
நிலை யடைவேனோ வேழை யேனே- (93)

அடியனேன் பிழைபலவு நீ பொறுத்தாட் கொண்ட வருட்க
டலே மனமே றுந்தமரர்க் கரசே, கொடியனேனே செய்பிழையைத்
திருவுளத்தே கொள்ளுவையோ கொண்டுநலங் குறிப்ப துண்டோ,
அடியனேன் முதற்கடவுட் சமூகத்தே யாக்கு நெடும்பிழைக ளாயிரமும்
பொறுத்து மாயை, பொடிபடவே பிறப்பெறுங் கருணை வள்ள லென
மறைக ளோதுவசிவ குணகத் தானன்றே. (94)

கண்மயக்கும் பேரிருட்டுக் காருற போதிற் கருத்தறியாச் சிறு
வனையோர் கடுங்கானகத்தே, யுண்மயக்கங் கொளவிடுத்தே பொருவன்
பின்போ மொருதாய்போன் மாயையிரு ளோங்கும் போதினை, மண்ம
யக்கம் பெறுமுடலைக் காட்டி யென்றோ மதியிலென் மாழாந்து மயங்க
நீதான், வண்மையுற நிற்கின்பி னென்னைவிட்டே மறைந்தனையே
பரமே நின் வண்மை யென்னே. (95)

நற்றாயும் பிழைகுறிக்கக் கண்டோ மிந்த நானிலத்தே மற்றவா
யார் நாடார் வீணே, பற்றாயு மொன்ற தமைநாம பற்றேரும் பற்றிற் பற்றுத
பற்றுடையார் பற்றி யுள்ளே, யுற்றாயுஞ் சிவபெருமான் கருணை
யொன்றே யுறுபிழைக ளெத்துணையும் பொறுப்ப தென்றான்,
பொற்றாளை விரும்பியது மன்றா ளாடும் பொருளேயென் பிழைய
னைத்தும் பொறுக்க வன்றே. (96)

கரவறியாவம்பலத்தென் கணவரைக்கண்டலது கண்டுயிலேனுண்டி கொளேனென்கவிரித்தமரேனென்பாள், ளிரவறியாள்பகலறியாளெதிர்வருகின்றவரையின்னவரென்றறியாளிங்கின்னலுழக்கின்றாள், வரவெதிர்பார்த்துழல்கின்றாளிவளளவிலுமதுமனக்கருத்தின்வண்ணமெதுவாய்மலரவேண்டும், இரவுமொருகணமுமினித்தாழ்க்கிலுயிர்தரியாள்மெய்ப்பொதுவில்நடம்புரியுமிகப்பெரியதுரையே. (274)

ஊராசையுடலாசையுயிர்பொருளிலாசையுற்றவர்பெற்றவராசையொன்றுமிலாளுமது, பேராசைப்பேய்பிடித்தாள்கள்ளுண்டுபித்தும்பிச்சியெனப்பிதற்றுகின்றாள்பிறர்பெயர்கேட்டிடிலோ, நாராசஞ்செவிபுகுந்தாலென்னநலிகின்றாள்நாடறிந்ததிதுவெல்லாம்நங்கையிவளளவில், நீராசைப்பட்டதுண்டேல்வாய்மலரவேண்டும்நித்தியமாமணிமன்றில்நிகழ்பெரியதுரையே. (275)

என்னுயிரிற்கலந்துகொண்டாரவரலவர்தாமிருக்கவிடம்புனைகவென்றாளிச்சைசமயமாகித், தன்னுயிர்தன்னுடல்மறந்தாளிருந்தறியாள்படுத்துந்தரித்தறியாளெழுந்தெழுந்துதனித்தொருசார்திரிவாள், அன்னமுணவழைத்தாலுங்கேட்பதிலாளுலகிலணங்கனையாரதிசயிக்குங்குணங்கள்பலபெற்றாள், மின்னிவளைவிழைவதுண்டேல்வாய்மலரவேண்டும்மெய்ப்பொதுவில்நடம்புரியுமிகப்பெரியதுரையே. 276

## தலைவி தலைவன்செயலைத் தாய்க்குரைத்தல்.

அதுபாவகமுகத்தானந்தநாட்டிலம்பலஞ்செய்துநின்றாடுமழகர், விதுபாவகமுகத்தோழியுநானும்மெய்ப்பாவனைசெயவும்வையாயிலவந்து, பொதுபாவனைசெய்யப்போகாதேபெண்ணேபொய்ப்பாவனைசெய்துகைப்பானேனையோ, இதுபாவமென்கின்றாரென்னடியம்மாவென்கைபிடிக்கின்றாரென்னடியம்மா. (277)

தனித்தலைவர்வருகின்றதருணமிதுமடவீர்தனிக்கவெனைவிடுமி
னென்றேனதனாலோவன்றி, இனித்தசுவையெல்லாமென்கணவரடிச்
சுவையேயென்றுரைத்தேனிதனாலோவெதனாலோவறியேன், பனி
த்தகுளிர்காலத்தேசனித்தசலம்போன்றாள்பாங்கியெனைவளர்த்தவளுந்
தூங்குமுகங்கொண்டாள், கனித்தபழம்விடுத்துமின்னார்காய்தின்னுகி
ன்றார்கருத்தர்நடராயர்திருக்கருத்தையறிந்திலனே. (282)

## நற்றாய் செவிலிக்குக் கூறல்.

உணர்ந்தவர்தமக்குமுணர்வரியானென்னுள்ளகத்தமர்ந்தனனெ
ன்றாள், அணிந்தனனெனக்கேயருண்மணமாலையதிசயமதிசயமென்
றாள், துணிந்துநான்றனித்தபோதுவந்தென்கைதொட்டனன்பிடித்த
னனென்றாள், புணர்ந்தனன்கலந்தானென்றாளேகளித்துப்பொங்கி
னாள்நான்பெற்றபொன்னே. (283)

திருமணிப்பொதுவிலொருபெரும்பதியென்சிந்தையிற்கலந்தன
னென்றாள், பெருமையிற்சிறந்தேனென்பெருந்தவத்தைப்பேசுதலரித
ரிதென்றாள், இருமையுமென்போலொருமையிற்பெற்றார்யாண்டுளார்
யாண்டுளாரென்றாள், மருமலர்முகத்தேயிளநகைதுளும்பவயங்கினாள்
நான்பெற்றமகளே. (284)

ஏலுநன்மணிமாமன்றருட்சோதியென்னுளத்தமர்ந்தனனென்றாள்
பாலுமின்சுவையும்போன்றெனதாவிபற்றினன்கலந்தனனென்றாள்
சாலுமெவ்வுலகுந்தழைக்கவென்றனக்கேசத்தியையளித்தனனென்றா
[ள்
மேலுமெக்காலுமழிவிலேனென்றாள்மிகுகளிப்பற்றனன்வியந்தே.

# அனுபவமாலை.

கண்ணுறங்கேனுறங்கினுமென்கணவரொடுகலக்தங்கனவேகண்டுளமகிழ்வேன்கனவொன்றேநனவின், எண்ணடங்காப்பெருஞ்சோதியென்னிறைவரெனையேயிணைந்திரவுபகல்காணுநின் புறச்செய்கின்றார், மண்ணுறங்குமலையுறங்குமலைகடலுமுறங்குமற்றுளவெல்லாமுறங்கும்யானிலநமீநமது, பெண்ணுறங்காளெனத்தாயர்பேசிமகிழ்கின்றார்பெண்களெலாங்கூசுகின்றார்பெருந்தவஞ்செய்கிலரே. (286)

அன்னமுணவமைக்கின்றாய்தோழியிங்கேநான்றானம்பலத்தேயாடுகின்றவண்ணலடிமலர்தந்தன், உன்னைநினைந்துண்டேனென்றுள்ளகத்தேவாழுமொருதலைமைப்பெருந்தலைவருடையவருட்புகழா, ம்மின்னமுதிலென்னுடையன்பென்னுநறுங்கனியிளிராதமுமென்றணிக்கணவருருக்காட்சியெனுமோர, கன்னலுமோதனித்தெடுத்தேதெம்பாதுகலந்தேகளித்துண்டேன்பசிசிறிதுங்கண்டிலனுள்ளகத்தே. (287)

கண்கலந்தகணவரெனைக்கைகலந்ததருணங்கண்டறியேனென்னையுமென்காரணக்காலையு, மண்கலந்தபோகமெலாஞ்சிவபோகந்தனிலோரிறையளவென்றுரைக்கின்றமறையளவின்றறிந்தேன், விண்கலந்ததிருவாளருயிர்கலந்ததருணம்வினைத்துயர்தீர்ந்தடைந்தசுகநினைந்திடுந்தோறெல்லாம், உண்கலந்தவானந்தப்பெரும்போகமப்போதுற்றதெனவெனைவிழுங்கக்கற்றதுகாண்டோழி. (288)

கற்பூரமணக்கின்றதென்னுடம்புமுழுதுமென்கணவர்திருமேனியிலேகலந்தமணமதுதான், இற்பூதமணம்போலமறைவதன்றுகண்டாயியற்கைமணந்துரியமறையிறைவடிவந்துளதே, பொற்பூவுநறுமணமுமெனக்கண்டறியாருலகர்புண்ணியனார்திருவடிவிணண்ணியவாறதுவே, நற்பூதியணிந்ததிருவடிவுமுற்றுந்தோழி நான்கண்டேனென்புணர்ந்தேதானானேனே, (289)

கள்ளுண்டாமெனப்புகன்றார்கனகசபைநடுவேகண்டதுண்டுசிற்சபையிலுண்டதுமுண்டடிநான், எள்ளுண்டபலவிடயத்திறக்குங்கள்ளன்றேயென்றார்றிறவாநிலையிலிருந்துங்களுலகர்,உள்ளுண்டபோதுமயக்குற்றிடுங்கள்ளலவேயுள்ளமயக்கனைத்தினையுமொழிந்திடுங்கள்மடவாய், அள்ளுண்டபிறதுமெனையடுத்தடுத்துக்கண்டாலறிவுருமவர்க் கமிழ்ங்கேயானுண்டகள்ளே. (290)

மனையணைந்தமலரணைமேலெனையணைந்தபோதுமணவாளர்வடிவென்றுமெனதுவடிவென்றுந், தனைநினைந்துபிரிக்கறிந்திலையடியெனைத்தான்சற்றுமறிந்திலனெனில்யான்மற்றறிவதென்னே, இனையளவாயினுமதிசயப்புணர்ச்சியென்பதிலையே திருவாளர்கலந்தபடிசெப்புவதெப்படியோ, உனையனைத்தாலிவ்வாறுநான்கேட்பேனப்போதுன்னறிவுமென்னறிவுமோரறிவாங்காணே. (291)

மணவாளர்வருகின்றதருணமிதுமடவாய்மாளிகையின்வாயிலெலாம்வளம்பெறநீபுனைக, குணவாளரணையுமலரணையதனைத்தனாகனைகுலவுமணிவிளக்கத்தாலலங்கரிக்கப்புகுவேன், நணவாதசுகந்தருமென்றனிக்கணவர்வரிலோசற்றுமயல்வாதனைகளுற்றிடுதலாகா, அணவாதமறைத்தலைரைப்புறப்பணிக்கேவிடுகவன்புடையார்களுக்கிடுவகப்பணிசெய்திடவே. (292)

என்னிருகணமணியனையாரென்னுயிர்நாயகருமென்னுயிருக்குமுதாருமெல்லாஞ்செய்வல்லார், பொன்னணிபொற்சபையாளர்சிற்சபையாமரன்னைப்புறம்புணர்ந்தாரகம்புணர்ந்தார்புறத்தகத்தும் புணர்ந்தார், அன்னியரல்லடியவரேயெனதுகுலதெய்வமருந்தவத்தாற்கிடைத்தகுருவாகுமதுமட்டோ, மன்னுறுமென்றனித்தாயுந்தந்தையுமங்கவரேமக்கள்பொருள்மிக்கதிருவொக்கலுமங்கவரே. (293)

திருச்சிற்றமபலத்தனபத்திருவுருக்கொண்டின்பத்திருநடஞ்செய்தருள்கின்றதிருவடிக்கேதொழும்பாய், அருச்சிக்கும்பேரன்பறிவி

கோனானவரைக்கலந்தவருநாளுமொன்றானபின்னருனையழைக்கின்றேனுவந்தே (298)

வைகறையீதருணமுதயந்தோன்றுகின்றதெனதுவள்ளல்வருதருணமினியார்தடையொன்றானாலும, சைகரையேயலிங்ஙனநான்றனித்திருத்தல்வேண்டுந்தாழ்குழலீயகேபோய்நத்தனுவப்பெண்குழுவில், பொய்கரையாதுள்ளபடிபுகழ்பேசியிருநீபுத்தமுதமளித்தவருட்சித்தர்வந்தவுடனே, உய்கரைவாய்நானவரைக்கலந்தவருநாளுமொன்றானபின்னருனையழைக்கின்றேனுவந்தே. (299)

காலையிலேவருகுவரென்கணவரென்றேநினைக்குக்கழறினனென்னலதுகாதிலுற்றதிலையோ, வேலையிலாதவள்போலேவம்பளக்கின்றாய்நீவிடிந்ததுநான்றனித்திருக்கவேண்டுவதாதலினால், சோலையிலேமலர்கொய்து தொடுத்துவந்தேபுறத்திற்சூழ்ந்திருப்பாய்தோழியென்றன்றுணைவர்வந்தவுடனே, ஓலையுறுதியானவரைக்கலந்தவருநாளுமொன்றானபின்னருனையழைக்கின்றேனுவந்தே. (300)

விடிந்ததுபோனவமாங்காரிருணீங்கியதுவெய்யவினைத்திரளெல்லாம்வெந்ததுகாண்மாயை, ஒடிந்ததுமாமாயையொழிந்ததுதிரைதீர்ந்ததுபேரொளியுதயஞ்செய்ததனித்தலைவர்வருதருணந், திடம்பெறநான்றனித்திருக்கவேண்டுவதாதலினால்தேமொழிநீபுறத்திருமாதேவர்வந்தவுடனே, உடம்புறவேநானவரைக்கலந்தவருநாளுமொன்றானபின்னருனையழைக்கின்றேனுவந்தே. (301)

மாலையிலேயுலகியலார்மகிழ்நரொடுகலத்தல்வழக்கமதுகண்டனைநீமணவாளருடனே, காலையிலேகலப்பதற்கிங்கெனைப்புறம்போவென்றாய்கண்டிலனீதிசயமென்றுரையேலென்றோழி, ஓலையிலேபொறித்தனைநீயுன்னுளத்தேகருதியுழல்கின்றாயாதலிலிவ்வுளவறியாய்தருமச், சாலையிலேசமரசசன்மார்க்கசங்கந்தனிலேசற்றிருந்தாயெனிலிதனையுற்றுணர்வாய்காணே. (302)

என்னுடைய தனித்தோழியிதுகேள்மையங்கேயெல்லாஞ்செய்வல்
லவனென்னின்னுயிர்நாயகனூர், தன்னுடையதிருத்தோளைநான்றழுவுந்
தருணந்தனித்தசிவசாக்கிரமென்றினித்தனிலேகண்டாய், பன்னுமிந்த
நிலைபரசாக்கிரமாகவுணரேல்பகர்பரசாக்கிரமடங்க தம்பதியாகும்புணர்ந்
து, மன்னுநிலைமற்றிரண்டுங்கடந்த துரியமாநிலையென்றுணர்க
வொளிர்மேனிலையிலிருந்தே. (303)

நான்புகலுமொழியிதுகேளொன்றுடையதோழிநாயகனூர்தனியுரு
வநான்றழுவுந்தருணம், வான்புகழுஞ்சுத்தசிவசாக்கிரமென்றுணர்ந்
தோர்வழுத்துநிலையாகுமொருச்சுவைகலந்தேதபதுவாம், தேன்கலந்தசு
வையொடுநன்மணிகலந்தவொளியாய்த்திரிபின்றியியற்கையின்பசிவ
னகலந்தநிலையே, தான்புகல்மற்றையமூன்றுங்கடந்தப்பாலிருந்தசாக்கி
ராதீதமெனத்தனித்துணர்ந்துகொள்ளே. (304)

பொன்பறியாப்புகல்வார்போன்மறைப்பதன்னமடவாய்புனை
யர்காலையிற்புணரநாணுவர்காணென்றாய், அன்பறியாப்பெண்களுக்
கேநின்னுரைசம்மதமாமாசைவெட்கமறியாதென்றறிந்திலேயோதோ
ழி, இன்பறியாயாதலினாலிங்கனைபேசைத்தாயிறைவர்திருவடிவதுகண்
டிட்டதருணந்தான், துன்பறியாக்காலையென்றுமாலையென்றுமொன்
றுந்தோன்றாதுசுகமொன்றேதோன்றுவதென்றறியே. (305)

அருளுடையாரனையுடையாரம்பலத்தேநடிக்குமழகரெல்லாம்வ
லலவர்நாமணைந்தருளுங்காலமிருளுடையவிரவகத்தேயெப்பதாதுகண்
டாயெதனாலென்றுண்ணுதியேயலியம்புயன்கேள்மடவாய், பொருளு
டையென்றனித்தலைவர்திருமேனிச்சோதிசெப்புறுபார்முதல்நாதப
ரியந்தங்கடந்தே, அருளுறுமோர்பரநாதவெளிகடந்தப்பாலுமப்பாலும்
விளங்குமடியகம்புறத்துநிறைந்தே. (306)

உரியபெருந்தனித்தலைவரோங்குசடாந்தத்திலுட்புறத்துமப்புறத்
துமொருசெங்கோல்செலுத்துந், துரியர்துரியங்கடந்தசுகசொருபர்

ன், குருதுரியங்காண்கின்றேன் சமரசசன்மார்க்கங்கூடினேன் பொது
விலருட்கூத்தாடுகின்றவர், மருவிடப்பெற்றவர் வடிவானேனேன் களி
த்துவாழ்கின்றேனெனதிறவாவாழ்க்கையிலென்றோழி (311)

தனிப்படுமோர்சுத்தசிவயாக்கிரத்தன்னிலையிற்றனித்திருந்தேன்சுத்
தசிவசொப்பனத்தேசார்ந்தேன், தனிப்படுமெய்ச்சுத்தசிவசுழுத்தியிலே
களித்தேன்கலந்துகொண்டேன்சுத்தசிவதுரியநிலையதுவாய்ச், செனி
ப்பிலாவெல்லாமாயல்லதுமாருஞ்சுத்தசிவதுரியாதீதத்தே சிவமயமாய
நிறைந்தேன், பனிப்புறுசிற்சபையறையைப்பெற்றபர்சாருலுந்தனை
யும்பெற்றிங்கேயிருக்கின்றேன்றோழி. (312)

அருட்சோதித்தலைவரெனக்கன்புடையகணவரபூர்வியபொன்மே
னியைநான்றழுவினின்றதருணம், இருட்சாதித்தத்துவங்களெல்லா
ம்போயினவாமெனக்குமெப்பேரொளிமயமாயிருந்ததுவாங்கவர்தாம், மரு
ட்சாதிநீக்கியெனைப்புணர்ந்தவொருதருணமன்றுசிவானந்தமயமாகிநி
றைவுற்றேன், றெருட்சார்பிலிருந்தோங்குசமரசசன்மார்க்கத்திருச்ச
பைகண்டுற்றேனென்றிருக்கணவருடனே. (313)

புறப்புணர்ச்சியென்கணவர்புரிந்ததருணந்தான்புகலமுதநானுண்
டுபூரித்ததருணம், சிறப்புணர்ச்சிமயமாகியகப்புணர்ச்சியவர்தாஞ்செய்
ததருணச்சுகத்தைச்செப்புவதெப்படியோ, பிறப்புணர்ச்சிவிடயமிலே
சுத்தசிவாநந்தப்பெருமபோகப்பெருஞ்சுகந்தான்பெருகியெங்கு நிறைந்
தே, மறப்புணர்ச்சியில்லாதேநானதுவாயதுவென்மயமாய்ச்சின்மயமா
ய்த்தன்மயமானநிலையே. (314)

---

## வரம்பி லின்பம்.

சுத்தமுற்றவைம்பூதவெளிகரணவெளிமேற்றுலங்குவெளிதுரிய
வெளிசுகவெளியேமுதலாம், இத்தகையவெளிகளுள்ளேயெவ்வெளி

யோநடனமியற்றுவெளியென்கின்றாரென்றாலவ்வெளியில், நித்தபரி
பூரணமாயானந்தமயமாய்நிருத்தமிடுமெம்பெருமானிபுணநடராயன்,
சித்துருவாந்திருவடியினுண்மைவண்ணமறிந்துசெப்புவதாரென்வச
மோசெப்பாயென்றோழி. (315)

காற்றுருவோகனலுருவோநடவுருவென்பார்காற்றுருவுங்கன
லுருவுநகண்டுரைப்பீரென்றால், வேற்றுருவேபுகல்வரதைவேறென்
றால்மறுத்தால்விழித்துவிழித்தெய்ம்போல்வார்மிகவுமருள்கின்றார்,தோ
ற்றுமந்தத் தத்துவமுந்தோற்றாத் தத்துவமுந் துரிசாகவவைகடந்தசுக
சொருபமாகி, மாற்றமனவுணர்வுசெல்லாத்தலத்தாடும்பெருமான்வடி
வுரைக்கவல்லவாரார்வழுத்தாயென்றோழி. (316)

## அடிமைப்பேறு.

தானேயருளாளன்றானேபொருளாளன்
தானேயெல்லாம்வல்லதாளனென்-றானேதான்
நாளனெனுடையநாயகனேன்ஞான
வாளனம்பலத்தெம்மான். (317)

## சிதம்பரமான்மியம்.

உலகமெலாந்தொழவுற்றதெனக்குண்மையொண்மைதந்தே
யிலகவெலாம்படைத்தாருயிர்காத்தருளென்றதென்றும்
கலகமிலாச்சுத்தசன்மார்க்கசங்கங்கலந்ததுபார்த்
திலகமெனநின்றதுத்தாஞானசிதம்பரமே. (318)

குருநெறிக்கேயெனைக்கூட்டிக்கொடுத்ததுகூறரிதாம்
பெருநெறிக்கேசென்றபேர்க்குக்கிடைப்பதுபேயுலக
கருநெறிக்கேற்றவர்காணற்கரியதுகாட்டுகின்ற
திருநெறிக்கேற்கின்றதுத்தாஞானசிதம்பரமே. (319)

கொல்லாநெறியதுகோடாநிலையதுகோபமிலார்
சொல்லாலுவந்ததுசுத்தசன்மார்க்கந்துணிந்ததுல
கெல்லாமளிப்பதிறந்தாரெழுப்புவதேதமொன்றுஞ்
சொல்லாவளத்தினைச்சுத்தஞானசிதம்பரமே (320)

காணாதகாட்சிகள்காட்டுவிக்கின்றதுகாலமெல்லாம்
வீணாள்கழிப்பவர்க்கெய்தரிதானதுவெஞ்சினத்தார்
கோணாதநெஞ்சிற்குலாவிநிற்கின்றதுகூடிநின்று
சேணாடர்வாழ்த்துவதுசுத்தஞானசிதம்பரமே. (321)

சொல்வந்தவேதமுடிமுடிமீதிற்றலங்குவது
கல்வந்தநெஞ்சினர்காணற்கரியதுகாமமிலார்
நல்வந்தனைசெய்யநண்ணியபேறதுநன்றெனக்கே
செல்வந்தந்தாட்கொண்டதுசுத்தஞானசிதம்பரமே. (322)

ஏகாந்தமாகிவெளியாயிருந்ததிங்கென்னைமுன்னே
மோகாந்தகாரத்தின்மீட்டதென்னெஞ்சமுயங்கிரும்பின்
மாகாந்தமானதுவல்வினைதீர்த்தெனைவாழ்வித்தென்றன்
தேகாந்தநீக்கியதுசுத்தஞானசிதம்பரமே. (323)

## கைம்மாறின்மை.

கடுத்தமனத்தையடக்கியொருகணமுமிருக்கமாட்டாதே
படித்தசிறியேன்குற்றமெலாம்பொறுத்தென்னறிவைப்பலநாளுந்
தடுத்ததடையைத்தவிர்த்தென்றன்சாகாநலஞ்செய்தனியமுதங்
கொடுத்தகுருவேநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (321)

சேட்டித்துலகச்சிறுநடையிற்பல்காற்புகுந்துதிரிந்துமயல்
நீட்டித்தலைந்தமனத்தையொருநிமிடத்தடக்கிச்சன்மார்க்க

கோட்டிசகியன்றதுணங்களெலாங்கூட்டப்புரிந்துமெய்ந்நிலையைக்
காட்டிக்கொடுத்தாயநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. 325

தோலைக்கருதித்தினந்தோறுஞ்சுழன்றுசுழன்றுமயங்குமனந்த
வேலைக்கிசைந்தமனத்தைமுற்றுமடக்கிஞானமெய்ந்நெறியிற்
கோலத்தொலைத்துக்கண்விளக்கங்கொடுத்துமேலும்வேகாத
காலைக்கொடுத்தாய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (326)

அருணடறியாமனக்குரங்கையடக்கத்தெரியாதமுருடுசோந்
திருணடனைத்துஞ்சுழன்றுசுழன்றிளைத்துக்களைத்தேனெனக்கந்தோ
பொருணலிலகில்மரணமுறுக்கிறந்தறியாததிருவளித்த
கருணைநிதியேநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே (327)

மாட்சியளிக்குஞ்சன்மார்க்கமரபில்மனத்தைச்செலுத்துதற்கோர்
சூட்சியறியாதுழன்றேனைச்சூழ்ச்சியறிவித்தருளரசி
னாட்சியடைவித்தருட்சோதியமுதமளித்தேயானந்தக்
காட்சிகொடுத்தாயநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே. (328)

போதலொழியாமனக்குரங்கின்போக்கையடக்கத்தெரியாது
நோதல்புரிந்தசிறியேனுக்கிரங்கிக்கருணைநோக்களித்துச்
சாதலெனுமோராசங்கடத்தைத்தவிர்த்தென்னுயிரிற்றான்கலந்த
காதலரசேநின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே (329)

## திருவருட்பேறு.

விளங்குகின்றசிற்றம்பலத்தருணடமிடுகின்றபெருவாழ்வே
களங்கமில்லசோருநடுவிளங்கியகருணையேயடியேனுன்
விளம்பிநின்றபோதேவிண்ணப்பநிருசெவியேற்றருள்புரிந்தாயே
யுளங்கொளிவ்வழியிம்மையேமந்திரவொளிவழிவாமாறே. (330)

வேதத்தின்முடிமிசைவிளங்குமோர்விளக்கேமெய்ப்பொருளாகம
வியன்முடிச்சுடரே, நாதத்தின்முடிநடுநடமிடுமொளியேநவையறுமு
ளத்திடைநண்ணியநலமே,யேதத்தினின்றெனையெடுத்தருணிலைக்கே
யேற்றியகருணையென்னின்னுயிர்த்துணையே, தாதுற்றவுடம்பழியா
வகைபுரிந்தாய்தனிநடராஜவென்சற்குருமணியே. (336)

## தான்பெற்ற பேறு.

மனமெனுமோர்பேய்க்குரங்குமடப்பயலேநீதான் மற்றவர்போ
லெனைநினைத்துமருட்டாதேகண்டாய், இனமுறவென்சொல்வழியே
யிருத்தியெனிற்சுகமாயிருந்திடுநீயென்சொல்வழியேற்றிலையானாலோ,
தினையளவுன்னதிகாரஞ்செல்லவொட்டே னுலகஞ்சிரிக்கவுனையடக்கி
டுவேன்றிருவருளாற்கணத்தே, நனவிலெனையறியாயோயாரெனநீ
யிருந்தாய்ஞானசபைத்தலைவனுக்குநல்லபிள்ளைநானே. (337)

பன்முகஞ்சேர்மனமெனுமோர்பரியாசப்பயலேபதையாதேசிதை
யாதேபாசகுமிடமெல்லாங், கொன்முகங்கொண்டடிக்கடிபோய்க்கு
தியாதேயெனதுகுறிப்பின்வழிநின்றிடுநின்குதிப்புநடவாது, என்மு
னமோர்புன்முனைமேலிருந்தபனித்துளிநீயிம்மெனுமுன்னடக்கிடுவே
னென்னையறியாயோ, பின்முனெனநினையேல்காண்சிற்சபையினடிக்
கும்பெரியதனித்தலைவனுக்குப்பெரியபிள்ளைநானே. (338)

விரிந்தமனமெனுஞ்சிறியவிளையாட்டுப்பயலேவிரிந்துவிரிந்தலை
யாதேசெம்மலியாதேவிடயம், புரிந்தநெறிபுரிந்தவமேபோகாதேபொறி
வாய்ப்புரையாதேவிரையாதேபுகுந்துமயங்காதே,தெரிந்துதெளிந்துதொ
ருநிலையிற்சித்திரம் போலிருநீசிறிதசைந்தாலக் கணமேசிதைத்திடுவே
ன்கண்டாய், பரிந்தெனைநீயாரென்றுபார்த்தாய்சிற்சபைவாழ்பதிதனக்
கேயருட்பட்டம்பலித்தபிள்ளைநானே. (339)

அகங்காரமெனும்பொல்லா அடவாதிப்பயலேயடுக்கடுக்காயெடுக்கின்றாயடுத்துமுடுக்கின்றாய், செகங்காணத்தலைகாலுந்தெரியாமலலைந்து திரிகின்றாய்நின்செபந்தான்சிறிதுநடவாது, இகங்காணவடங்குகநீயடங்காயேற்கணத்தே யிருந்தவிடந்தெரியாதே யெரிந்திடச்செய்திடுவேன், சுகங்காணவென்றனைநீயறியாயோநான்றான்சுத்தசிவசன்மார்க்கம் பெற்றபிள்ளைகாணே. (340)

மானெனுமோர்சகச்சாலச்சிறுக்கியிதுகேளுன்வஞ்சகக்கூத்தெல்லாமோர்மூட்டையெனக்கட்டி, ஈனமுறநின்றலைமேலேற்றெடுத்துக்கொண்டுன்னேவல்புரிபெண்களொடேயிவ்விடம்விட்டேகிக், கானடைந்துகருத்தடங்கிப் பிழைத்திடுநீயிலையேல் கணத்திலுனைமாய்ப்பேனுன் கணத்தினொடுங்கண்டாய், ஏனெனைநீயறியாயோசிற்சபையினடஞ்செயிறைவனருட்பெருஞ்சோதிக்கினியபிள்ளை நானே. (341)

மாமாயையெனும்பெரியவஞ்சகிநீயிதுகேள்வரைந்தவுன்றன்பரிசனப்பெண்வகைதொகைகளுடனே, போமாறுன்செயலனைத்தும்பூரணமாக்கொண்டுபோனவழிதெரியாதேபோய்ப்பிழைநீயிலையேல், சாமாறுன்றனையின்றேசாய்த்திடுவேனிது நான்சத்தியமென்றெண்ணுதியென்றன்னையறியாயோ, ஆமாறுசிற்சபையிலருணடம்புரிவாரருளமுதுண்டருணிலைமேலமர்ந்தபிள்ளைநானே. (342)

கன்மமெனும்பெருஞ்சிலுக்குக்கடுங்கலகப்பயலேகங்குகரைகாணாதகடல்போலேவினைகள், நன்மையொடுதீமையெனப்பலவிகற்பங்காட்டிநடத்தினைநின்னடத்தையெல்லாஞ்சிறிதுநடவாது, என்முனிருந்தனையெனினீயழிந்திடுவாயதனாலிக்கணத்தே நின்னினத்தோடேகுகநீயிலையேல், இன்மையுறமாய்த்திடுவேனென்னையறியாயோவெல்லாஞ்செய்வல்லவனுக்கினியபிள்ளைநானே. (343)

எத்துணையுங்காட்டாதவாணவமென்றிடுமோரிருட்டறைக்கோரதிகாரக்குருட்டுமுடப்பயலே, இத்தனைநாட்பிடித்ததனைக்கண்டுதுரத்தி

டவேயின்னுமரைக்கணந்தரியேனிக்கணத்தேநினது, பொத்தியசுற்றத்துடனேபோய்விடுதியிலையேல்பூரணமெய்யருளொளியாற்பொன்றுவிப்பேனினையே, சத்தியஞ்சொன்னேனெனைநீயறியாயோஞானசபைத்தலைவன்றருதலைமைத்தனிப்பிள்ளைநானே. (344)

பேசுதிரோதாயியெனும்பெண்மடவாயிதுகேள்பின்முனறியாதெனைநீயென்முன்மறைக்காதே, வேசறமாமலவிரவுமுழுதும்விடிந்ததுகாண்வீசுமருட்பெருஞ்சோதிவிளங்குகின்றதறிநீ, எ றுநின்செயலனைத்துமென்னளவினடவாதிதையறிந்து விரைந்தெனைவிட்டேகுகவிக்கணத்தே, மாசறுமென் றிதமொன்றுந்தெரிந்திலையோவெல்லாம்வல்லவொருசித்தருக்கேநல்லபிள்ளைநானே. (345)

தூக்கமெனுங்கடைப்பயலேசோம்பேறியிதுகேள்துணிந்துனதுசுற்றமொடுசொல்லுமரைக்கணத்தே, தாக்குபெருங்காட்டகத்தேயேகுகநீயிருந்தால்தப்பாதுன்றலைபோகுஞ்சத்தியமீதறிவாய், ஏக்கமெலாந்தவிர்ந்துவிட்டே னூக்கமெலாம்பெற்றே னின்பமுறுகின்றேனீயென்னையடையாதே, போக்கில்விரைந்தோடுகநீபொற்சபைசிற்சபைவாழ்பூரணர்க்கிங்கன்பானபொருளெனவறிந்தே. (346)

பயமெனுமோர்கொடும்பாவிப்பயலேநீயிதுகேள்பற்றறவென்றனைவிடுத்துப்பனிக்கடல்வீழ்ந்தொளிப்பாய், நயவினுரைத்தேனின்னுமிருத்தியெனிலுன்றன்றலைதனக்குத்தீம்புவருந்தலைமட்டோநினது, செயலுறுமுள்ளுடம்பழியுஞ்சுற்றமெலாமிறக்குந்தீர்ந்ததினியில்லையென்றேதிருவார்த்தைபிறக்கும், அயலிடைநோக்கோடுகநீயென்னையறியாயோவம்பலத்தென்னப்பனருணம்புபிள்ளைநானே. (347)

கோபமெனும்புலைப்பயலேகாமவலைப்பயலேகொடுமோகக்கடைப்பயலேதுறும்புமதப்பயலே, தாபவுலோபப்பயலேமாற்சரியப்பயலேபவுடனிங்கிசைக்கின்றேன்சூழ்ந்திருக்காதீர்காண், தீபமெலாங்கடந்திருள்சேர்நிலஞ்சாரப்போவீர்சிறிதுபொழுதிருந்தாலுந்திண்ணமிங்கே

யழிவீர், சாபமுறுமுன்னமறிந்தோடுமின்றேவெனனைத்தானறியீர்சனி
த்தலைவன்றலைப்பிள்ளை நானே (348)

பசியெனுமோர்பெரும்பாவிப்பயலே துன்பெனுமோர்படுபாவிப்
பயலேயாபத்தெனும்பொல்லாப்பயலே, வசியவத்தைக்கச்சடைப்பயலேதடை
ப்பயலேயிடாமவன்பயலேநீவிரெலாமென்புடைநில்லாதீர், நசியவும
க்குளமுளதோவிக்கணத்தேநீவிரோட்டந்துவிரைந்தோடுமின்றேனாடறியா
வண்ணந்தே, நசியுமனந்தெனையறியீர்சிற்சபையில்விளங்குங்கடவுண்மகி
ழ்ந்தளித்தத்தனிக்குசிறப்பிள்ளை நானே (349)

மரணமெனும்பெருந்திருட்டுமாபாவிப்பயலேவையகமுமவானக
முமற்றகமுங்கடந்தே, பரணமுறும்பேரிருட்டுப்பெருநிலமுந்தாண்டிப்
பசையறநீயொழிந்திடுகவிங்கிருந்தாயெனிலோ, இரணமுறவுனைமுழு
துமடித்திடுவேனித்தரா னென்னுடையா னருளாணையெனகுருமேலா
ணை, அரணுருமென்றனைவிடுத்தே யோடுகநானருணருட்பெருஞ்சோ
திப்பதியையடைந்தபிள்ளைகாணே (350)

## உய்வகை கூறல்

ஆதியந்தமுமில்லதோரம்பலந்தாடும்
சோதிதன்னையேசினைமின்கள்சுகம்பெறவிழைவீர்
நீதிகொண்டுரைப்பேனிதுநீவிர்மேலும்
வீசிமற்றையவீதிகள்கீழ்ச்செலும்வீதி (351)

துரியமேற்பரவெளியிலேசுகநடம்புரியும்
பெரியதோரருட்சோதியைப்பெறுதலேயெவைக்கும்
அரியபேறுமற்றவையெலாமெளியவேயறிமின்
உரியவிம்மொழிமறைமொழிசத்தியமுலகீர் (352)

ஆகமாநதமுமவேதத்தினநதமுமறையும்
பாகமாம்பரவெளிநடம்பரவுவீருலகீா
மோகமாநதருககுரைததிலேலவிதுசுகமுன்னும்
யோகமாநதாககுககாலமுணடாகவேயுரைததேனை (353)

## உறுதி கூறல்.

வட்டிமேல்வட்டிகொளமாககததில்நின்றீாவட்டியைவளர்ககின்ற மாாககததையறியீா, பெட்டிமேலபெட்டிவைததாள்கினறீாவயிற்றுப பெட்டியைநிரப்பிககொணடொட்டியுளளிருநதீா, பட்டினிகிடப்பா ரைப்பாாககவுநேரீாபழஙகஞ்சியாயினுமவழஙகவுநினையீா, எட்டிபோல வாழ்கின்றீாகொட்டிபோற்கிளைததீரொததுணேகொள்கினறீாபிததுல கீரே. (354)

சாதியிலேமதஙகளிலேசமயநெறிகளிலேசாததிரசசநதடிகளிலே கோததிரசசணடையிலே, ஆதியிலேயபிமானிததலைகின்றவுலகீாலைந தலைநதுவீணே ாழி லழகலவே, நீதியிலேசனமாாகநிலைதனிலேஞா னநிருததமிடுநதனிததலைவரொருததரவாசாமே, வீதியிலேயருட்சோ திவிளையாடலபுரியமேவுகின்றதருணமிதுகூவுகின்றேனுமையே

வையகததீாவானகததீாமற்றகததீாநுமது வாழ்க்கையெலாமவா ழ்ககையெனமதிததுமயஙகாதீா, மையகததேயுறுமரணவாதனையைத தவிாததவாழ்ககையதேவாழ்ககையெனமதிததனைப்பெறவே, மெய யகததேவிருமபியிஙகே வநதிடுமினெனது மெயப் பொருளாநதனிததந தையிததருணநதனிலே, செய்யகததேவளாஞானசிததிபுரநதனிலேசி ததாடலபுரிகின்றாநிண்ணமிதுதானே. (356)

## சுத்தசிவநிலை.

சத்தியஞ்செய்கின்றேன்சகத்தீரறிமின்கள்
சித்தியெலாம்வல்லசிவமொன்றே-நித்தியமென்
றெண்ணுமெண்ணத்தாலேநம்மெண்ணமெலாங்கைகூடும்
நண்ணுமின்பத்தேனென்றுநான். (357)

சாத்திரங்களெல்லாந்தடுமாற்றஞ்சொல்வதன்றி
நேத்திரங்கள்போற்காட்டநேராவே-நேத்திரங்கள்
சிற்றம்பலவன்றிருவருட்சீர்வண்ணமென்றே
உற்றிங்கறிந்தேனுவந்து. (358)

வேதாகமங்களென்றுவீண்வாதமாடுகின்றீர்
வேதாகமத்தின்விளைவறியீர்-சூதாகச்
சொன்னவலாலுண்மைவெளிதோன்றவுரைத்தவிலை
என்னபயனோவிவை. (359)

மார்க்கமெலாமொன்றாகுமாநிலத்தீர்வாய்மையிது
தூக்கமெலாநீக்கித்துணிந்துளத்தே-யேக்கம்விட்டுச்
சன்மார்க்கசங்கத்தைச்சார்ந்திடுமின்சத்தியநீர்
நன்மார்க்கஞ்சேர்வீரிந்நாள். (360)

ஏமாந்திருக்குமெமரங்காளிவ்வுலகில்
சாமாந்தராகாதநரம்பெறவே-காமாந்த
காரத்தைவிட்டுக்கருதுமினோவித்தருணம்
நீரத்தைச்சேர்வீர்நிசம். (361)

---

## ஞானசரியை.

தீமையெலாநன்மையென்றேதிருவுளங்கொண்டருளிச்சிறியே
னுக்கருளமுதத்தெளிவளித்தத்திறத்தை, ஆமயந்தீர்த்தியற்கையின்ப

வனுபவமேமெய்யமாயம்பலத்தேவிளங்குகின்றவருட்பெருஞ்சோதியையோர், ஓமயவான்வடிவுடையாருள்ளகத்தேநிறைந்தவொருபொருளைப்பெருங்கருணையுடையபெரும்பதியை, நாமருவியிறவாதநலம்பெறலாமுலகீர்நல்லவொருதருணமிதுவல்லைவம்மினீரே. (362)

நிந்தையிலார்நெஞ்சகத்தேநிறைந்தபெருந்தகையைநிலையனைத்துங்காட்டியருணிலையளித்தகுருவை, எந்தையையென்றனித்தாயையென்னிருகண்மணியையென்னுயிரையென்னுணர்வையென்னறிவுள்ளறிவைச், சிந்தையிலேதனித்தினிக்குந்தெள்ளமுதையனைத்துஞ்செய்யவல்லதனித்தலைமைச்சிவபதியையுலகீர், முந்தைமலவிருட்டொழியமுன்னுமினோகாரணமுடிக்கொழித்துக்கடைமரணநடுக்கொழித்துமுயன்றே. (363)

சாருலகவாதனையைத்தவிர்த்தவருள்ளகத்தேசத்தியமாயமர்ந்தருளுமுத்தமசற்குருவை, நேருறவேயெவராலுங்கண்டுகொளற்கரிதாம்நித்தியவான்பொருளையெலாநிலைகளுங்காணகி, ஏருறவேவிளங்குகின்றவியற்கையுண்மைதன்னையெல்லாஞ்செயவல்லபத்தையெனக்களித்தபதியை, ஒருறவென்றடைந்துலகீர்போற்றிமகிழ்ந்திடுமினுள்ளமெலாங்கனிந்துருகியுள்ளபடிநினைந்தே. (361)

## பதிநிச்சயம்.

கிழக்குவெளுத்ததுகருணையருட்சோதியுதயங்கிடைத்ததெனதுளக்கமலங்கிளர்ந்ததெனதகத்தே, சழக்குவெளுத்ததுசாதியாசிரமாசாரஞ்சமயமதாசாரமெனச்சண்டையிட்டகலக, வழக்குவெளுத்ததுபலவாம்பொய்ந்நூல்கற்றவர்தம்மனம்வெளுத்துவாய்வெளுத்துவாயுறவாதித்த, முழக்குவெளுத்ததுசிவமேபொருளெனுஞ்சன்மார்க்கமுழுநெறியிற்பரநாதமுரசமுழங்கியதே. (365)

உழக்கறியீரளப்பதற்கோருளவறியீருலகீரூறறியீர்போறியீருண்மையொன்றுமறியீர், கிழக்கறியீர்மேற்கறியீரம்பலத்தேமாயைக்கேதமறநடிக்கின்றபாதமறிவீரோ, வழக்கறிவீர்சண்டையிட்டேவம்பளக்கவறிவீர்வடிக்குமுன்னேசோறெடுத்துவயிற்றடைக்கவறிவீர், குழைக்கறியேபழக்கறியேகூட்டுவர்க்கக்கறியேகுழம்பேசாறேயெனவுங்கூறவறிவீரே. (366)

இணக்கறியீரிதமறியீரிருந்தநிலையறியீரிடமறியீர்கடமறியீரிவ்வுடம்பையெடுத்த, கணக்கறியீர்வழக்கறியீரம்பலத்தேமாயைக்கலக்கமறநடிக்கின்றதலக்கமறிவீரோ, பிணக்கறிவீர்பிரட்டறிவீர்பிழைசெயவேயறிவீர்பேருணவைப்பெருவயிற்றுப்புலத்திலிடவறிவீர், மணக்கறியேபிணக்கறியேவறுப்பேயோர்பொரிப்பேவடைக்குழம்பேசாறேயென்றடைக்கவறிவீரே. (367)

கடுகொட்டுக்கறிக்கிடுக தாளிக்கவெனக்கழறிக்களிக்காநின்ற
சுடுகாட்டுப்பிணங்காளிச்சுகமனைத்துங்கணச்சுகமேசொல்லக்கேண்மி
முடுகாட்டுக்கூற்றுவருஞ்சாவீராற்சாவதற்குமுன்னேநீவிர் [ன்
இடுகாட்டுப்பிணங்கண்டாலேத்துமிசேனுவெமையுமிவ்வாறிடுகவென்
[றே (368)

வாதுபேசியமனிதர்காளொருவார்த்தைகேண்மின்கள்வந்துநும்
போதுபோவதன்முன்னரேயருட்பொதுவிலேநடம்போற்றுவீர்
தீதுபேசினீரொன்றிடாதுமைத்திருவுளங்கொளுங்காண்மினோ
சூதுபேசிலனன்மைசொல்கின்றேன்சுற்றமென்பதுபற்றியே. (369)

---

## ஞானசம்பந்தர் ஸ்தோத்திரம்.

ஒங்காரவணைமீதுநானிருந்ததருணமுவந்தெனதுமணவாளர்சிவந்தவடிவகன்றே, ஈங்காரப்பளிங்குவடிவெடுத்தெதிரே நின்றுரிருந்தருள்

கவெனவெழுந்தேனெழுந்திருப்பதென்னீ, ஆங்காரமொழியென்றுரொழிந்திருந்தேனப்போதவர்நானோநானவரோவறிந்திலன்முன்குறிப்பை, ஊங்காரவிரண்டிருவுமொன்றானோமாங்கேவுறைந்தவநுபவந்தோழிநிறைந்தபெருவெளியே. (370)

## திருவண்ணப்பதிகம்.

எழுவகைப்பிறவிகளுளெப்பிறவியெய்துகினுமெய்துகபிறப்பிலினிநா, னெய்தாமையெய்துகினுமெய்திடுகவிருமையினுமின்பமெய்தினுமெய்துக, வழுவகைத்துன்பமேவந்திடினும்வருகமிகுவாழ்வுவந்திடினும்வருக, வறுமைவருகினும்வருகமதிவரினும்வருகவவமதிவரினும்வருகவுயர்வோ, டிழிவகைத்துலகின்மற்றெதுவரினும்வருகவலதெதுபோகினும்போகநின், னிணையடிகண்மறவாதமனமொன்றுமாத்திரமெனக்கடைதல்வேண்டுமரசே, கழிவகைப்பவரோகநீக்குநல்லருளௌனுங்கதிமருந்துதவுநிதியே, கனகவம்பலநாதகருணையங்கணபோதகமலகுஞ்சிதபாதனே (371)

சந்ததமெனக்குமகிழ்தந்தைநீயுண்டுநின்றன்னிடத்தேமவல்லித், தாயுண்டுநின்னடியரென்னுநற்றமருண்டுசாந்தமெனுநேயருண்டு, புந்திகொணிராசையாமனைவியுண்டறிவெனும்புதல்வனுண்டிரவுபகலும், போனவிடமுண் டருட்பொருளுமுண்டானந்த போகபோக்கியமுண்டு, வந்தனைசெய்நீறெனுங்கவசமுண்டக்கமாமணியுமுண்டஞ்செழுத்தா, மந்திரப்படையுண்டுசிவகதியெனும்பெரியவாழ்வுண்டுதாழ்வுமுண்டோ, கந்தமிகுகொன்றையொடுகங்கைவளர்செஞ்சடைக்கடவுளேகருணைமலையே, கனகவம்பலநாதகருணையங்கணபோதகமலகுஞ்சிதபாதனே. (372)

## ஆளுடையவடிகளருண்மாலை.

வான்கலந்தமாணிக்கவாசகநின்வாசகத்தை
நான்கலந்துபாடுங்காலைக்கருப்பஞ்சாற்றினிலே
தேன்கலந்துபால்கலந்துசெழுங்கனித்தீஞ்சுவைகலந்தென்
னூன்கலந்துவுயிர்கலந்துவுவட்டாமலினிப்பதுவே. (373)

பெண்சுமந்தபாகப்பெருமானொருமாமே
லெண்சுமந்தசேவகன்போலெய்தியதும்வைகைநதி
மண்சுமந்துநின்றதுமோர்மாறன்பிரம்படியாற்
புண்சுமந்துகொண்டதுநின்பொருட்டன்றோபுண்ணியனே. (374)

## மெய்யநர்வியப்பு.

இராகம்-அடாணா, ரூபகதாளம்

**பல்லவி**

எனக்குமுனக்குமிசைந்தபொருத்தமென்னபொருத்தமோ
இந்தப்பொருத்தமுலகில்பிறருக்கெய்தும்பொருததமோ.

**சரணங்கள்.**

உன்பேரருளைநினைகுந்தோறுமுடம்புபொடிக்குதே
உண்டுபசிதீர்ந்தாற்போற்காதல்மிகவுந்தடிக்குதே
அன்பேயமையுமென்றபெரியர்வார்த்தைபோயிற்றே
யன்போரணுவுமில்லாவெனக்கிங்கருளவாயிற்றே. (எனக்கு)

நினைக்கநினைக்கத்தித்திப்பெனதுநினைவிற்கொடுக்குதே
நின்பாலன்றிப்பிறர்பாற்செல்லநெஞ்சநடுக்குதே
எனைத்துன்பொழித்தாட்கொண்டநின்னையன்னையென்பனோ
வெந்தாயன்பிலேனின்னடிக்குமுன்னையென்பனோ. (எனக்கு)

நெடுநாண்முயன் றுங்காண்டற்கரியநிலையைக்காட்டியே
நிறைந்தென்னகத் தும்புறத்துஞ்சூழ்ந்தவொளியைநாட்டியே
நடுநாடியநின்னருளுக்கென்மேலென்னநாட்டமோ
நாய்க்குத் தவிசிட்டனைநின் றனக்கிங்கிதுவோராட்டமோ. (என)

பூதவெளியினடமும்பகுதிவெளியினாட்டமும்
போகவெளியிற்கூத்தும்யோகவெளியுளாட்டமும்
நாதவெளியிற்குனிப்பும்பரமநாதநடமுமே
நன் றுகாட்டிக்கொடுத்தயென் றுநலியாத்திடமுமே. (எனக்கு)

எட்டுமிரண்டுமிதுவென் றெனக்குச்சுட்டிக்காட்டியே
யெட்டாநிலையிலிருக்கப்புரிந்தாயிட்டுக்கூட்டியே
துட்டவினையைத்தீர்த்துஞானச்சுடருள்ளேற்றியே
தூண்டாதென் றும்விளங்கவைத்தாயுண்மைசாற்றியே. (என)

எண்ணுந்தோறுமெண்ணுந்தோறுமென்னுள்ளினிக்குதே
யிறைவநின்னைப்பாடநாவிலமுதஞ்சனிக்குதே
கண்ணுங்கருத்துநின்பாலன்றிப்பிறர்பாற்செல்லுமோ
கண்டேனுன்னையினிமேலென்னைமாயைவெல்லுமோ. (என)

விந்தோநாதவெளியுங்கடந்துமேலுமீளுதே
மேலைவெளியுங்கடந்துன்னடியாராணையாளுதே
அந்தோவுனதுபெருமைசிறிதுமறிவாரில்லையே
யறிந்தாருலகிலின்பவடிவமாவரொல்லையே. (எனக்கு)

சாதல்பிறத்தலென் னுமவத்தைதவிர்த்துக்காலையே
தனித்துன்னருளினமுதம்புகட்டிக்கொடுத்தாய்மேலையே
ஓதலுணர்தலுவத்தலெனக்குநின்பொற்பாதமே
யுலகவிடயக்காட்டிற்செல்லாதெனதுபோதமே. (எனக்கு)

தூங்கல்விடுதலிரண்டுமெனக்குச்சமமதாயிற்றே
சகத்தில்வழங்குமாயைவழக்குத்தவிர்ந்துபோயிற்றே

யேங்கல்சலித்தலிரண்டுமின்றியிளைப்புநீங்கினே
னைந்தாய்கருணையமுதுண்டின்பப்பொருப்பிலோங்கினேன். ()

உறவுபகையென்றிரண்டுமெனக்கிங்கொன்றதாயிற்றே
யொன்றென்றிரண்டென றுளாறமபேதமோடிப்போயிற்றே
மறைவுநினைவென்றென்னை வலித்தவலிப்புநீங்கினேன்
மன்றிற்பரமானந்தநடங்கண்டின்பமோங்கினேன். (எனக்கு)

---

௱௫௰௩.

இராகம் - காம்போதி, அடதாளம்.

பல்லவி.

வாரீர்சிதம்பரவல்லிசிவகாம
வல்லிமணாளரேவாரீர்
மணிமன்றவாணரேவாரீர். (வாரீர்)

சரணங்கள்.

ஆகமவேதமனேகமுகங்கொண்
டருச்சிக்கும்பாதரேவாரீர்
ஆருயிர்நாதரேவாரீர். (வாரீர்)

உள்ளக்கருத்தைநான்வள்ளற்குரைப்பதென்
னுள்ளத்திருந்தீரேவாரீர்
விள்ளற்கரியீரேவாரீர். (வாரீர்)

உன்னுதோறுன்னுதோறுள்ளேயினிக்கின்ற
உத்தமரேயிங்குவாரீர்
உற்றதுணையானீர்வாரீர். (வாரீர்)

ஊமையெழுத்தினுள்ளாமையெழுத்துண்டென்
றோமையறிவித்தீர்வாரீர்
சேமஞ்செறிவித்தீர்வாரீர். (வாரீர்)

எட்டுமிரண்டுமென்றிட்டுவழங்குத
லெட்டும்படிசெய்தீர்வாரீர்
எட்டுருவாயினீர்வாரீர். (வாரீர்)

எண்ணமெல்லாமுமதெண்ணமல்லால்வேறே
ரெண்ணமெனக்கில்லைவாரீர்
வண்ணமளிக்கின்றீர்வாரீர். (வாரீர்)

ஏகாந்தநன்னிலையோகாந்தத்துள்ளதென்
றேகாந்தஞ்சொல்லினீர்வாரீர்
தேகாந்தமெல்லீரேவாரீர். (வாரீர்)

ஏகாதகல்விதான்சாகாதகல்வியென்
றேகாதலாற்சொன்னீர்வாரீர்
வேகாதகாலினீர்வாரீர். (வாரீர்)

ஏசாததந்திரம்பேசாதமந்திர
மீசானமேலென்றீர்வாரீர்
ஆசாதியில்லீரேவாரீர். (வாரீர்)

ஐந்துமலங்களும்வெந்துவிழவெழுத்
தைந்துஞ்செய்யுமென்றீர்வாரீர்
இந்துசிகாமணிவாரீர். (வாரீர்)

ஒத்தவிடந்தனில்நித்திரைசெய்யென்றி
ரொத்தவிடங்காட்டவாரீர்
சித்தசிகாமணிவாரீர். (வாரீர்)

ஓங்காரநாடகம்பாங்காகச்செய்கின்ற
வோங்காரநாடரேவாரீர்
ஆங்காரநீக்கினீர்வாரீர். (வாரீர்)

ஓராதுலகினைப்பாரா திருநினக்
கோராவகையென்றீர்வாரீர்
பேராநிலைதந்தீர்வாரீர். (வாரீர்)

ஓமென்பதற்குமுன்னுமென்றுரைத்துடன்
ஊமென்றுகாட்டினீர்வாரீர்
நாமென்றுநாட்டினீர்வாரீர். (வாரீர்)

## கீர்த்தனைகள்.

இராகம். கல்யாணி - அடதாளம்.

### பல்லவி.

இதுநல்லதருணம் — அருள்செய்ய
இதுநல்லதருணம்.

### அநுபல்லவி.

பொதுநல்லநடம்வல்லபுண்ணியரேகேளும்
பொய்யேதுஞ்சொல்கிலேன்மெய்யேபுகல்கின்றேன் (இது)

### சரணங்கள்.

மதித்தசமயமதவழக்கெல்லா மாய்ந்தது
வருணாச்சிரமமெனுமயக்கமுஞ் சாய்ந்தது
கொதித்தலோகாசாரக்கொதிப்பெல்லா மொழிந்தது
கொலையுங்களவுமற்றைப்புலையு மழிந்தது (இது)

குறித்தவேதாகமகூச்சலு மடங்கிற்று
கொதித்தமனமுருட்டுக்குரங்கு முடங்கிற்று
வெறித்தவெவ்வினைகளும்வெந்து குலைந்தது
விந்தைசெய்கொடுமாயைச்சந்தையுங் கலைந்தது.

கோபமுங்காமமுங்குடிகெட்டுப் போயிற்று
கொடியவோரங்காரம்பொடிப்பொடி யாயிற்று

தாபமுஞ்சோபமுந்தான்றானே சென்றது
தத்துவமெல்லாமென்றன்வச நின்றது. (இது)

கரையாவெனதுமனக்கல்லுங் கரைந்தது
கலந்துகொளற்கென்கருத்தும் விரைந்தது
புரையாநிலையிலென்புந்தியுந் தங்கிற்று
பொய்படாக்காதல்ததும்பிமேற் பொங்கிற்று

இதுநல்லதருணம் - அருள்செய்ய
இதுநல்லதருணம்.

## பிரபஞ்ச வெற்றி.

அருட்சோதியானேனென்றறையப்பாமுரசு
அருளாட்சிபெற்றேனென்றறையப்பாமுரசு
மருட்சார்புதீர்ந்தேனென்றறையப்பாமுரசு
மரணந்தவிர்ந்தேனென்றறையப்பாமுரசு.

## மங்களம்.

புங்கவர் புகழுமாதுங்கமுகந்திக
ழெங்கள் கணேசாநு துங்கற்கு - மங்களம்.

போதந்திகழ்பர நாதந்தனினின்ற
நீதராஞ்சண்முக நாதற்கு - மங்களம்.

பூசைசெய்வாருள மாசைசெய்வார்தில்லை
யீசரெமது நடராஜற்கு - மங்களம்.

புண்ணியராகிய செண்ணியராய்த்தவம்
பண்ணியபத்தர்க்கு முத்தர்க்கு - மங்களம்.

திருச்சிற்றம்பலம்.

நிரதிசயாநந்தத் திரட்டு முற்றுப்பெற்றது.

சிவமயம்.

# திருப்போரூர்ச்

# சந்நிதிமுறை.

---

## குறுங்கழி நெடில் விருத்தம்.

அருட்கட றதும்பிக் கவுட்செவிச் சார லருவிபாய்ந் தெழிறரு மச
லம், விருப்புற மருப்பிற் கடகமொன் றெடுத்து வீறுகிம் புரியெனத்
தரிப்போய், சுருப்பினந் தொடருங கதுப்பினார் மயக்கிற் றளைந்துரு
தெனையினி யளிப்பாய், பொருப்பன புயத்தோய் மயிற்பரி யுகைத்
தோய் போரிவா ழாறுமா முகனே. (1)

அறிவுதன்னினைவிற்கலந்துறுபோகிலரும்பாமுயிர்சகமுளவாம்
பிறிவிலவ்வறிவந்நினைவினையகன்றுற்பேதாபேதபகமொன்றின்றி
நெறியுறத்தானேதன்னிடத்திருககுநிச்சயமெலை றெனக்கிசைத்தான்
பொறிமறுமார்பனமருகவேளெனையாள்போரிவாழாறுமாமுகனே. 2

நினைவறிவெனவிவ்விரண்டினைவிரித்துநிகழ்த்துறுஞ்சுருதியீண்
டிவற்றி, னினைவிரண்டாகும்பரநினைவெனவுநிலவுறுமுயிர்நினைவெ
னவும், புனைபரநினைவுசகமுயிர்நினைவுபுரிந்ததைப்பிடிக்குமென்றிசை
த்தான், புனையரும்பாரஞ்சொரிதருநெய்தற்போரிவாழாறுமாமுகனே.

பரனதுமுகத்திற்குலகுபொய்சீவன்படிற்றுளக்கினுக்கதுமெய்ம்மை
திரமுறுசாட்சிதானெனச்சீவன்றெரிந்திடிற்பரன்மனமிவற்காம்
விரவியசகமப்போதுபொய்யாகிவிளங்குறுமென்றெனக்கிசைத்தான்
புரமெரிசெய்தோனுவந்துபெற்றெடுத்தபோரிவாழாறுமாமுகனே 4

அறிவினைநோக்கிலுயிர்வயமாகுமகமனஞ்சகத்தையவ்வுயிர்தான்
பிறிபடநோக்கின்மனத்தினின்வயமாம்பிறப்புமீதிதன்வயப்படாது
நெறியுறுமறிவின்மிகப்பரிசிக்கினினைப்பருங்கதியுமீதென்றான்
பொறிமயிலேறுஞ்சேவகனெனையாள்போரிவாழாறுமாமுகனே. (5)

எதொருநினைவிங்கெழுமதுமனமீதெனதெனவருமிதன்மூலந்
தீதறுமூலவகங்காரமீதியானென்றெழுஞ்செப்புமிங்கிவைக்கு
மூதிருளவித்தைமூலமீதகன்றான்மெய்யறிவெனவெனக்கிசைத்தா
போதகமார்க்கும்புகன்றமெய்க்குரவன்போரிவாழாறுமாமுகனே. ௬

சச்சிதானந்தமெனும்பெயர்மூன்றிற்றழுவுமாவரணமூன்றிவைநா
நிச்சயவறிவாற்சமாதிஞானத்தாணிகழ்வுறுசகசஞானத்தா [தான்
லச்சமின்றகலுமிவற்றினையறியென்றருட்கடணிறைத்தெனையளித்
பொய்ச்சழக்ககன்றமனத்தினர்நினைக்கும்போரிவாழாறுமாமுகனே.

சுருதியின்றுணிவாணினைவுகொண்டுலகந்துச்சமென்றுணர்தநி ச்சயமாங், கருதுறுநினைவையடக்கியிவ்வுலகங்கானலென்றுணர்ந்த ல்சமாதி, யிருவகையாய்முன்னுரைத்தவையின்றியிலங்கறிவுருவமா ருத்தல், பொருவறுசகசஞானமென்றிசைத்தான்போரிவாழாறுமா முகனே. (8)

நிச்சயஞானஞ்சமாதிஞானங்கணிராசையார்மனத்தினிற்கலங்கா
தெச்சமென்றிருக்குமாசையார்மனத்திலிரண்டுஞானங்களுங்கலங்கு
நச்சுதலவெகுளியின்றியசகசஞானிகணசையுளர்போலப்
பொய்ச்சகத்துறினுங்கலங்காரென்றான்போரிவாழாறுமாமுகனே

சித்தொருநான்கிற்பிரமங்கூடத்தன்செப்புமாயாரகிதங்கண்
மத்தமிலீசனுயிர்கடாமாயாசகிதங்கள்வழுத்துமிவ்வீசன்
சத்தெனுந்தன்னைமறப்பிலாமையினுற்றதுகநிதேகடிலன்சீவன்
பொய்த்தலில்வீடுதேடுமென்றிசைத்தான்போரிவாழாறுமாமுகனே.

ஓதுருநாமமியானெனதசுத்தமுயர்ந்துளசுத்தவாதனைக
ளாதியதிரோதமனுக்கிரகித்தாலாகைவாக்கியக்கவாதனைக [ன்
ளேதமில்காட்சிகாண்பவனென்றவிவற்றுளோர்வகுப்பினுன்மனத்தி
போதமினினைவைப்பகுத்தடக்கென்றான்போரிவாழாறுமாமுகனே.

கயிலைவாழரசுதந்தகற்பகமக்கனவரசுரைகொடிக்கனிநா
லியல்புறுகற்புக்கன்னிமாரிருவரிருமருங்குறைவடமேரு
வயிலுடன்மயிலுங்கோழியுமாடுமழகுடன்படைத்தமெய்க்கடவுள்
புயலினஞ்சுரந்துபொழிதருநீதிப்போரிவாழாறுமாமுகனே. (12)

தடவரைப்பிறந்தநதியராச்சென்றுதண்கடற்படமுடிமீது
சுடர்விரியுதயகதிர்மணிவிளக்குஞ்சுந்தரப்போரிவேலிறையே
மடமையின்றடியேனுனதருளமிர்தவாரியின்மூழ்கிடநினையாய்
குடமுனிசிவந்தசடைமுடியிவர்ந்தகுரவணிசரணவாரிசனே. (13)

முற்றுப்பெற்றது.